ஒலிம்பிக் பிரசுரம் 1.

# கல்யாணி



அரு. சோமையா

ஒலிம்பிக் பிரசுராலயம்

காரைக்குடி.





# பாபாத்மா



விலை அணா 3

# எல். பழனியப்பா & கோ.,

## ஜனரல் மெர்ச்சண்ட்ஸ்,

## கண்டனூர்.

---

எங்கள் சீவல் எல்லாக்கடைகளிலும் கிடைக்கும்.

---

எங்கள் போட்டோ மார்க் பற்பொடி.




எங்கள் போட்டோ மார்க் சீவல்.

எங்கள் பற்பொடியானது அநேக நற்சாட்சிப் பத்திரங்கள் பெற்றது. ஓர் முறை வாங்கி உபயோகியுங்கள்.

எங்கள் போட்டோமார்க் பன்னீர், குங்குமப்பூ வெட்டு அசல் சி[illegible] பு[illegible]யிலையை வாங்கி உபயோகியுங்கள்

# L. Palaniappa & Co.,

## General Merchants, Kondanoor.

Kottaiyur S. I. R. -::- Ramnad Dist.

## Dr. V. S. S. Moni's

(L. M. S. H.)

### SPECIAL REMEDY

# "VANISH"



This skin cure instantly relieves and quickly heals eczema, dhoby's itch, pricklyheat, ulcers, boils, ringworm, burns, Face Pimples, chapped hands and feet, syphilitic ulcers and all other skin diseases. Rub the ointment daily twice after washing the ulcers. Fragrant smell, No irritation. External use only.

Postage Extra. (1 bot. As. 4.)

Dr. V. S. S. MONI, L.M.S.H.

KARAIKUDI.

# கல்யாணி



அ
ல்
ல
து



# பாபாத்மா

Publishers :
Olympic Publishing House,
KARAIKUDI.

# அட்டவணை.

# நூன் முகம்.



உலகம் போற்றும் உயர்தனிச் செம்மொழியாகிய தெய்வத் தமிழன்னை உருக்கொளும் இலக்கியம் இயலுறு செய்யுள் உரையாகிய உயர் நடை பயின்று தன் மக்கள்பால் உண்மை நல்லறிவுச் சுடர் வளர்த்து வருகையைத் தமிழ் மக்கள் பலரும் உணர்ந்து கோடல் ஒருதலை.

தனது திறமை தோன்ற, த்தொன்மை, வரலாறு, கட்டுரைகளைத் திரிசொற்களாலும் நெடுஞ் சொற்றொடர் முடிபுகளாலும் அமைத் தெழுதித் தமிழ் நூல் பயின்றார் சிலர்க்கே இன்பூட்டுமாறு செய்தலை எண்ணாது, தமிழ் நூல் பயின்றார் பயிலார் அனைவருக்கும் பொருளாலும் உலகியல் எளியஉரை நடைகளாலும் இன்புறுத்த விரும்பி, முதன்முறையாக இந்நூலாசிரியர் இந்நிலையம் வாயிலாக இந்தக் கட்டுரை நூலை வெளியிட முன்வந்தது பாராட்டற் பாலது.

இவ்வாறுகொண்டு இந்நிலையம் மேலும்மேலும் தொடர்பாக நூல்களைப் பெருக்க முயன்றிருக்கும் இத்தமிழ்த்தொண்டு போற்றத்தக்கது.

இவ்வகை நூலும் இயலுற்ற தமிழ் நூல் வகையினுள் ஒன்றென அமையும். இதனுள், உயர்குடிப் பிறப்பு, மாறுபடும் இயல்பு, பெற்றோர் சொல் கேளாமையின் தீமை, இளமையினிலையிலாக்கோள், ஆடல் பாடல் குழலிசைகளின் பெருமை, காமம்,

கள்ளக்காதல், ஏமாற்றம், பொறுத்தமின் மணத்தாலுளதாம் இழிவு, கற்பொழுக்கம், ஊழ்வினையுருத்துவந்தூட்டுதல், நாடகமேடைகளின் சூழல்கள் ஆகிய பொருள்களும் பல அறிவுரைகளும் அமைந்துள்ளன.

இந்நூலாசிரியர் என் அன்புற்ற மாணுக்கருள் இயற்கையாகப்பெற்ற உலகியலறிவினுல் இளமையிலேயே மிளிர்பவர். சிறு சிறு கட்டுரைத்துணுக்குக்கள் வரைந்து வெளியிடுகளைப் படிப்பவரைத் தன்படியே இயக்குபவர்.

இந்நூல் போலவும் நாளடைவில் பெருநூல் போலவும் காலவியல்புக்குத்தக்க சீர்திருத்தஞ் செய்து உலகிற்குறுதிதரவல்ல சிரிய நூல்கள் பலவற்றை உலகிற்குதவிப் புகழ்பெறுமாறும், எல்லாம்வல்ல இறைவன் இனிதருள்புரிந்து இவரை நீடுவாழச்செய்யுமாறும் அவனடிகளை மனமார வழுத்துகின்றேன்.

**ப. மாசிலாமணித் தேசிகன்.**

Head Tamil Pandit,
S. M .S. High School.

KARAIKUDI,
11—5—38.

# எனது வேண்டுகோள்.

மேல் நாடுகளிலே இடறிவிழுந்த இடமெல்லாம் கவிகளும், கட்டுரையாளனுமாகத்தான் இருக்கிறார்கள். அதில் கிடைக்கும் ஊதியம் மிகமிகக் குறைவாக இருந்தபோதிலும், அந்த வாழ்க்கையிலும் அவர்களுக்கோர் ஆனந்தம். அவர்களது உற்சாகத்தால்தான் அங்கெல்லாம் இலக்கிய அபிவிருத்தி நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்றது.

ஒருநாள்கூட பட்டினியிருக்க அவர்களுக்குத் தேவையில்லை. ஒருவன் ஒரு பக்கம் எழுதிக்கொடுத்து ஒரு சாண் வயிற்றை நிறப்பிக்கொள்ளுகிறான். இதற்கெல்லாம் காரணம்: அந்த நாட்டு மக்களுக்குள்ள இலக்கியச் சுவையாகும்.

தமிழ் நாட்டில் எவ்வளவோ சிறந்த எழுத்தாளர்கள் இருக்கின்றார்கள். ஆனால் அவர்கள் ஊக்கமளிப்பாரன்றி மறைந்து கிடக்கிறார்கள். அவர்களை பிரகாசிக்கச் செய்ய முடியவில்லையே யென்று பத்திரிகைக்காரர்களைக் குறைகூற முடியாது. இன்று புதிதாக ஆரம்பித்த பத்திரிகை அல்ப்பாயுசில் முடிகிறதென்றால் அதற்குக் காரணம்: தமிழ் மக்களுக்கு பாஷாபிமானமும், அதன் வளர்ச்சியில் அக்கரையும் இல்லை என்றே கூறிவிடலாம்.

தமிழ் மக்களைக் கெஞ்சிக் கேட்டுக்கொள்ளுகிறேன். உங்கள் பாஷைக்கும் கொஞ்சம் சலுகை காட்டுங்கள். திறமையை வைத்துக்கொண்டு மறந்து கிடக்கும் எழுத்தாளர்களுக்கும் கொஞ்சம் புத்துயிர் அளியுங்கள். தமிழ்த் தாயின் ஜீவநாடி கீழே இறங்க வேடிக்கை பார்க்கவேண்டாம். இதுதான் எனது தாழ்மையான வேண்டுகோள்.

ஆக்கியோன்.

# எனது நன்றி.

எனது வேண்டுகோளுக்கிணங்கி, என்பால் அன்பு காட்டி இப் புத்தகத்திற்கு நூன்முகம் அளித்த எனது குருவும், காரைக்குடி ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்பண்டிதருமான ஸ்ரீ மாசிலாமணித் தேசிகரவர்கட்கு எனது தாழ்மையான வணக்கத்தை தெரிவித்துக் கொள்ளுகின்றேன்.

தனது சிரமத்தையும் பாராது வாழ்த்துச் செய்தியனுப்பிய ஸ்ரீஜத். எஸ். சத்தியமூர்த்தி அவர்களுக்கு எனது வணக்கம்.

இத்துடன் எனக்காக சிரமம் எடுத்துக் கொண்டு, பலவிதத்திலும் எனக்கு ஊக்கமளித்த ஸ்ரீ எஸ். ராமஸ்வாமிக்கும், ஸ்ரீ ராமசுப்ரமண்யத்திற்கும் எனது நன்றி உரித்தாகுக.

காரைக்குடி,<br>20—5—38.

டி. எஸ். சுப்ரமனியம்.



Dear Mr. Subramaniam,

............I wish all success to your enterprise. I shall always be glad and willing to give you such help as I can.

Yours Truly,

(Sd.) S. Satyamurti.

# செல்லம் சிரிப்பாணி.

---

"பெரியவா சொல்லறத்தைக் கேட்டால் ஒரு குறையும் கிடையாது" என்றால், "ஆமாம் பெரியவா சொல்லறதெல்லாம் சாகிறதற்குத்தான்" என்பாள்.

"முன் காலத்திலெல்லாம் பெரியவா செய்திருக்கிற கட்டுப்பாடெல்லாம் சரியாகத்தான் இருக்கு" மென்றால், "முன் காலமெல்லாம் பெரியவாளுடைய சமாதியிலேயே புதைத்தாய் விட்டதே" என்பாள்.

வரப்போகும் காலத்தை எல்லாம் முன்னதாகவே அறிந்துதான் நம் ஆன்றோர்கள் பெண்களுக்கு என்று அதிகமான கட்டுப்பாடுகள் அமைத்தனர்.

அன்னிய நாட்டிலே, நாகரீகம் நாகரீகம் என்று அடித்துக்கொள்ளும் மேல் நாடுகளிலே, ரூபாய் பத்து இருந்தால் பதினாயிரம் மாதர்களின் கற்பை விலைக்குவாங்கலாம். இருபது வயதிற்குள்ளே ஐந்து புருஷன். இன்று மணம்; நாளை விவாக ரத்து. என் புருஷன் 'டீக்காக' உடையுடுத்தமாட்டேன் என்கிறான். அது எனக்குப்பிடிக்கவில்லை என்று கூறி விவாகரத்துக்கு மனுப்போடுகிறாள். இப்படி இருக்கிறது மேல் நாடுகளில்!

மேற் கூறிய இரண்டையும் எடுத்துச் சொல்லப்போவோமானால் முன்னது மூடநம்பிக்கை என்கிறாள். அப்படிப்பட்ட நாரீமணிகளைப் பெற்ற காலம் இது. அப்படியிருக்க கல்யாணியைமட்டிலும் தனியாகக் கூறி என்ன பயன்.

கல்யாணி பிறக்கும்பொழுது கையில் கடிகாரத்துடனும், காலில் ஸில்பருடனும் பிறக்கவில்லை. இப்பொழுது சாப்பிடும் பொழுதுகூட 'ஸில்பர்' அணியாவிட்டால், பொன்னுடும் திரு மேனியைத் தாங்கிச்செல்லும் மல்லிகைச் செண்டுபோன்ற அவள் பாதகமலங்கள் தேய்ந்துவிடாதா என்கிருள்!

இதையெல்லாம் அவளிடம் கேட்கப்போனல், அவள் சொல்லுகிருள்: "ஆமாம்! நம்மைப் படைக்கும்பொழுது, அந்தக் கடவுள் நீ பிறந்த மேனிக்கே இரு என்றுதான் சொன்னுராக்கும்? என்னவோ கிழங்கட்டைகள் பேத்தறது" என்று தர்க்கம் செய்யக் கிளம்பிவிடுவாள்.

பிறக்கும்பொழுதே குதர்க்க புத்தி; அதிலும் செல்வ முள்ள இடத்தில் பிறந்திருக்கிருள். வாழும் நகரமோ நாகரீகம் முற்றின நகரம். கேட்பானேன்?

அவள் அதிர்ஷ்டம் போலவே வாய்த்தது எல்லாம். பிறக்கும்பொழுதே தாயைக் 'கபளீஹரம்' செய்துவிட்டாள். தாய் இருந்தாலாவது இஷ்டப்படி மனம்போன போக்கில் ஒன்றையும் செய்ய அனுமதிக்கமாட்டாள். தாயற்ற பெண் எப்படியிருக்கும் என்பது தெரிந்த விஷயம்தானே?

பட்டணத்திலே பெரியதொரு மாளிகை. அதில் அவ் வளவு விசாலமான இடத்திலே பொலிவற்று நடமாடுகிறது இருஉருவங்கள். தாயற்ற பெண் கல்யாணியை இமைகாப்பது போல் காத்துவருகிருர் லக்ஷ்மிபதி.

அவள் முகம் கொஞ்சம் வாடினால் போதும். லக்ஷ்மிபதி பிடந்து தவிப்பார்; பரிதவிப்பார்; படாதபாடெல்லாம் படுவார். நிமிடத்திற்கு ஒரு டாக்டரைத் தருவழைப்பார்.

ஒருதரம் அவள் செய்த வேடிக்கையை இன்னும் அவள் மறந்துவிடவே இல்லை. செல்லப் பெண்ணுக்கு பாசாங்கு செய்ய கற்றுக்கொடுக்கவும் வேண்டுமா என்ன?

ஒரு நாள் லக்ஷ்மிபதி வெளியே சென்றிருந்த சமயம். படுக்கையை எல்லாம் அலங்கோலமாய் போட்டாள். தலையை கலைத்துவிட்டுக்கொண்டாள். தலைவலி மருந்தைப் பூசிக் கொண்டு காலிலிருந்து தலைவரையில் போர்த்திக்கொண்டாள். அத்துடன் 'அம்மா, அப்பா' என்ற முனகல் வேறு.

தகப்பனார் வெளியிலிருந்து வந்து சேர்ந்தார். அலங் கோலத்தை எல்லாம் பார்த்தார். அரைமணி நேரத்தில் பத்து டாக்டர்கள் வந்து போனார்கள். வந்தவர்களெல்லாம் ஏதே தோ மருந்தைக் கொடுத்துச் சென்றார்கள். செலவு ரூபாய் 100-க்கு மேல் ஆகிவிட்டது. டாக்டர்களெல்லாம் போன பிறகு 'ஒன்றுமில்லையப்பா!' என்று சிரித்துக்கொண்டு எழுந் தாள் அந்தக் கல்யாணி.

மற்றொரு பிதாவாக இருந்தால் அந்த இடத்தில் நடந் திருக்கவேண்டிய விதமே வேறாக இருக்கும். பாவம்! லக்ஷ்மி பதி அழமாட்டாமல் சிரித்தார். இந்தப் பெண்ணைப் பெற் றெடுத்ததற்கு வேறு என்ன செய்யமுடியும்.

4

# ஐயோ முள்ளு !

இந்தக் கதை எல்லாம் பனிரண்டு வயதிற்குள் நடந்த சமாச்சாரம். இப்பொழுது கல்யாணிக்கு வயது பதினொன்கு ஆகிவிட்டது. பத்தாவது வகுப்பில் படிக்கிறாள். தான் பெரிய மனுஷியாகிவிட்டதாக நினைத்துக்கொண்டு, பெரியவர்கள் இருக்கும் மாதிரியாகவே நடக்க ஆரம்பித்தாள்.

அப்பொழுது அவளிடம் இருந்த சிறுபுத்தித்தனமெல்லாம் இப்பொழுது கிடையாது. அதனால் அந்தஸ்தானம் காலியாகிவிடவில்லை. அதற்குப் பதில் அற்ப புத்தி, மாய ஆசை இவைகள் குடியேற ஆரம்பித்துவிட்டது.

பெண்ணிற்கு வயதாகிவிட்டதென்று லக்ஷ்மிபதிக்குத் தெரியும். அவளை அடிக்கடி வெளியில் அனுப்ப மறுத்துவந்தார். பள்ளிக்கூடம் செல்வதையும் தடுத்துவிட்டார். கல்யாணிக்கு கட்டிப்போட்டாற்போல ஆகிவிட்டது. தன் அருமந்தப் புதல்விக்கு தடையுத்திரவு போடுவதென்றால் அவருக்கு இப்பொழுது எவ்வளவு தைரியம் வந்திருக்கவேண்டும்!

அப்பா சொன்னார்; பெண் 'ஆஹா' என்று சொல்லிவிட்டது என்று நினைக்கவே வேண்டாம். அதற்கு அவர் பட்ட பாடு:

சோபாவில் உட்கார்ந்திருக்கிறாள் பெண்ணரசி கல்யாணி. அவளருகில்கிடந்த முக்காலியில் ஒற்றைக்காலைவைத்து நின்றுகொண்டு பேசுகிறார் லக்ஷ்மிபதி.

"அம்மா கல்யாணி! இனிமேல் நீ பள்ளிக்கூடம் போக வேண்டாம் என்ன?"

"என்ன வந்துடுத்து?"

"ஒன்றுமில்லேயம்மா. நீ முன் போல சிறு குழந்தை இல்லேபாரு. இப்போ பெரியவளாயிட்டயோ இல்லேயோ. அதனுல் தான்"

"அதுக்கும் ஸ்கூலுக்குப் போரத்துக்கும் என்ன வெச்சிருக்கு?

"சிறு பெண்பாரு நீ. ஒவ்வொன்றையும் பார்க்கப்பார்க்க புதுப்புது ஆசை எல்லாம் தோணும். அப்புறம் ஊரார் ஏதாவது சொல்லுவா............

"என்னேக்காட்டிலும் உனக்கு ஊரார் பெரிசாப்போச்சு. இல்லேயா!"

"ஊஹும்! எல்லாம் உன்னுடைய நன்மைக்காகத்தான் சொல்லுகிறேன். உன் கூடப் படிக்கிற பசங்கள் சுத்தக் காலிகள். உன்னே ஏமாற்றிவிடுவார்கள். அப்புறம்............

"அப்படியானல் என் பேரில்கூட உனக்கு நம்பிக்கை இல்லே என்று சொல்லு" என்று கூறிவிட்டு முகத்தை ஆயிரம் கோணலாக வைத்துக்கொண்டு அழ ஆரம்பித்துவிட்டாள்.

முகத்தைத் தூக்கிவைத்து, கண்ணேத்துடைத்து அவளேச் சமாதானப்படுத்தப்பட்ட பாடு அவருக்கல்லவா தெரியும். அத்துடன் பள்ளிபோவதையும் நிறுத்தினுள் ஒரு வழியாக.

"அவனைச்சொல்ல ஒரு குற்றமுமில்லை. எல்லாம் நான் கொடுத்த செல்லம்" என்று தலையிலடித்துக்கொள்வார் அவர்.

எற்கனவே லக்ஷிமிபதி காசரோகத்தால் பீடிக்கப்பட்டவர். போதாததற்கு மனக் க்வலை வேறு.

இவ்வளவு அசம்பாவிதங்களுக்கிடையே அவளிடம் சாமர்த்தியமும் இருந்தது. எப்படிப்பட்ட நெருக்கடி வந்த போதிலும் சமாளித்துக்கொள்ள அவளிடம் சக்தி உண்டு. இந்த ஒன்றை வைத்துக்கொண்டுதான் லக்ஷிமிபதியும் தேறுதலடைவார்.

ஒருநாள் கல்யாணியை பீச்சுக்கு அழைத்துச்சென்றார். குரங்கும், பிர்மச்சாரியும் ஓடம் எறிய கதைபோலத்தான் ஆயிற்று. கல்யாணியின் ஒய்யார நடையும், மேனியலங்காரத்தையும் கண்டு அநேகரின் பார்வை அவள்மீது சென்றது. பார்க்காதவர்களைக்கூட 'என்னைப் பார்த்துவிட்டுப்போயேன்' என்று அழைப்பது போன்று அந்தக் கருவிழிகளைச் சுழற்றி வீசுவாள்.

நடந்துகொண்டே போகும்பொழுது 'ஐயோ' என்றலறினாள் கல்யாணி. விஷயத்தைக் கூறாது 'ஆ' 'ஊ' என்று கத்த ஆரம்பித்தாள். அவளைச் சுற்றிலும் கூட்டத்தைச் சொல்லி முடியாது.

கடைசியில் ஒருவாறுகச் சொல்லிமுடித்தாள்: "அப்பா! காலிலே முள்ளு தைச்சுடுத்து" என்று.

இவளது சாகஸமெல்லாம் லக்ஷிமிபதிக்குத் தெரியாமலா இருக்கிறது. கூட்டம் போட்டு ஒரு சின்ன சாகஸ நாடகம் நடித்தாள். அவ்வளவுதான்!

## பூர்வஞானம்.

---

லக்ஷிமிபதிக்கு இந்த சம்பவத்திலிருந்து கல்யாணி மீது வெறுப்புத்தட்ட ஆரம்பித்தது. முன் போல எடுத்ததற்கெல்லாம் செல்லம் கிடையாது. எதிலும் கண்டிப்புதான்.

ஒவ்வோர்சமயம் அவளுக்கும் பூர்வஞானம் வந்துவிடும். 'என்ன வாழ்வு!' 'என்ன உலகம்' என்றெல்லாம் எண்ணுவாள் உடனே நாகரீக ஆடைகளை எல்லாம் கழற்றி எறிவாள். ஒரு சுங்குடிப் புடவையைக்கட்டிக்கொண்டு, நெற்றியில் அழகாகக் குங்குமப்பொட்டு இட்டுக்கொள்வாள். நாகரிக சாமான்களை எல்லாம் ஒரு மூட்டையாகக் கட்டிக்கொண்டு அப்பாவிடம் வருவாள்.

"அப்பா! இதை எல்லாம் பீரோவிலே வைச்சுப் பூட்டு; இன்னமே ரொம்ப சாதாரணமாகத்தான் இருக்கப்போகிறேன்" என்பாள். அப்பாவிற்கு ஆனந்தம் தலைக்கேறிவிடும்–ஹிருதயம் கூட ஒரு அங்குலம் பூரித்துவிடும்.

"இப்பொத்தான் நீ நன்னாயிருக்கே. இந்த அழகுக்கு அந்த அலங்கார உடைகளெல்லாம் சமானத்துக்கு வருமா?" என்று பிரமாதமாக ஸ்தோத்திரம்செய்ய ஆரம்பிப்பார்.

அவர் சொல்வதுபோல் உண்மையே அப்படித்தான். நாகரிக ஆடையில் அவள் திகழுவதைவிட இந்த உடையில் அவள் மிகவும் பிரகாசித்தாள் என்பதில் சந்தேகமே இல்லை.

கல்யாணிக்கு இந்தப் பூர்வஞானப் பித்தெல்லாம் ஒரு நாள், இரண்டுநாள் தான். அப்புறம் பழைய நினைவுகள் வந்து விடும். 'லாஜிக்' (Logic) கின் தனி அம்சம் சம்பாஷணைமூலம் தாண்டவமாட ஆரம்பிக்கும்.

அப்பாவிடம் போவாள். 'அப்பா பீரோச்சாவியைக் கொடு' என்பாள்.

"எதற்குக் கல்யாணி?"

"வேணும் அப்பா!"

"எதற்குன்னு சொல்லக்கூடாதா?"

"என் 'டிரஸை' எல்லாம் எடுக்கணும்"

அவருடைய ஆனந்த ஹிருதயத்திலே துன்ப மழை பொழிய ஆரம்பிக்கும். மழைத் தேக்கம் ஹிருதயத்தைநிறப்பி கண்களின் மூலம் வழிய ஆரம்பிக்கும். பீரிட்டுக்கொண்டு வரும் அழுகையை அடக்கிக்கொண்டு சாவிக்கொத்தைஎடுத்து விட்டெறிவார்.

சுங்குடிப் புடவை ஒரு மூலையில்; குங்குமச்சொப்பு ஒரு பொந்திலே; மல்லிகைப் புட்பம் குப்பையில் கிடந்துவாடும்.

நாகரீக உடையில் தவழுவாள். முகம் முழுவதும் சீமை சுண்ணும்பு. காலிலே அழகான 'குந்து பூட்ஸ்' இத்தனை அலங் காரத்துடன் வேணுமென்றே பிதா முன் குறுக்கும், நெடுக் கும் போவாள்.

## கண்ணாடி உடைந்தது.

ஒரு நாள் எதேச்சையாக வந்து சேர்ந்தார் கல்யாணி யின் அறைக்கு. அப்பொழுது அவள் கண்ணாடிக்கு முன் உட்கார்ந்துகொண்டு உதட்டிற்குச் சாயமேற்றிக்கொண்டிருந் தாள். இதைப் பார்க்கும்பொழுது லக்ஷ்மிபதியின் மனம் கொதித்தெழுந்தது.

"கல்யாணி!"

கண்ணாடியின் முன் 'ஆடு சேரி'ல் உட்கார்ந்திருந்த கல் யாணி, ஆடியபடியே நாற்காலியைச் சுற்றி லக்ஷ்மிபதிஇருந்த பக்கம் திரும்பினாள். அவ்வளவு மரியாதை அப்பாவிடத்தில்.

"இந்த வேஷமெல்லாம் என்ன?" என்றார் அவர்.

"இல்லையப்பா. இதெல்லாம் உதட்டுக்குச் சாயமேற்றும் சாமான்கள்" என்று கூறிக்கொண்டே நாற்காலியினின்றும் அசைந்துகொடுத்தாள் அவள்.

"இப்போ என்னத்துக்கு இந்த அலங்காரமெல்லாம்" என்றார் கடுகடுப்பாக.

மௌனம் சாதித்தாள் கல்யாணி.

"அதை எல்லாம் கழற்றிவை" என்றார் பிதா.

"நான் கட்டிக்கொண்டு அலங்காரமாக இருப்பதைப் பார்க்க உமக்குப்பிடிக்கவில்லையா?"என்ருள்ஷஷாத்திரத்துடன்.

"உனக்கெதற்கு இதெல்லாம்?" என்ருர் அதிகார தோரணையில்.

"நான் அலங்காரம் செய்துகொள்வதுகூட உமக்குப் பொருமையாக இருக்கிறதா!" என்று கூறிக்கொண்டே நாற் காலியை விட்டு எழுந்து கோபமாக பிதா இருக்குமிடம் நோக்கி வந்தாள்.

"கல்யாணம் ஆகாத பெண்களுக்கு எதற்காக ஆடம்பர உடை" பதிலில்லை. கோபப் பார்வை.

"எவனைமயக்க இந்த வேஷமெல்லாம்?" என்ருர் கோபத் துடன்.

கல்யாணிக்குப் பொங்கி எழுந்தது கோபம். கண்களில் தாரைதாரையாக நீர் 'உமது பெண்ணையே தாசிஎன்கிறீர்களே' என்று கோபத்துடன் கூறிவிட்டுத்திரும்பினுள். ஆடு நாற்காலி யின் கால்கள் ஒடிந்தன. ஆள் உயரமிருந்த நிலைக்கண்ணுடி தூள் தூளாகியது. உயர்ந்த ஆடைகளை எல்லாம் கிழித்தெறிந் தாள். ஐயோ! அவளுடைய அருமையான 'லிப் ஸ்டிக்' (Lip Stick)க்கும் 'குந்து பூட்சு'ம் ஜன்னலைத்தாண்டி குப்பை மேடை நோக்கிப் பறந்தது. அறைமுழுவதும் அலங்கோலம்.

ஒரு மாதிரியாக ஆடித்தீர்த்தாள் அலங்காரி. அழுது பொருமிக்கொண்டு படுக்கையில் போய் குப்புறச் சாய்ந்தாள்.

மனம் புழுங்கி, மானம் புறந்தள்ள தலையில் கையைவைத்துக்கொண்டு விரைந்தேகினுர் தன் அறைக்கு.

## பாழ்வெளியில் ஓர் சித்திரம்.

---

அறையில் உட்கார்ந்துகொண்டு சஞ்சல உலகில் சஞ்சரிக்கிருர் லக்ஷிமிபதி. அப்பொழுது அவர் மனைவியுடன் வாழ்ந்த காலத்தில் நடந்த ஒரு மறக்க முடியாத சம்பவம் ஞாபகத்திற்கு வந்தது.

ஆபீஸிலிருந்து வந்து கொண்டிருக்கிருர் லக்ஷிமிபதி. வீட்டு வாசல்படியில் காலை வைத்தார்.

வீதியில் சென்றுகொண்டிருந்த நாகரீகவாலிபனெருவன் தன்வீட்டு மொட்டைமாடியை நிமிர்ந்து பார்த்துக்கொண்டே செல்வதைக் கண்ணுற்ருர்.

கொஞ்சம் வீதிப்பக்கம் நகர்ந்து, மொட்டை மாடியில் பார்வையைச் செலுத்தினுர் லக்ஷிமிபதி. அழகான உடையில் அங்கு நின்றுகொண்டு தெருவைப்பார்த்துக் கொண்டிருந்தாள் அவரது இளமனைவி. உண்மையில் அவள் அந்த வாலிபனை லக்ஷியம் செய்ததாகவே தெரியவில்லை.

'வாசலில் ஓர் பெண் நின்று கொண்டிருந்தால் அவன் என் குறும்புப் பார்வையாகப் பார்க்கவேண்டும்?' என்று ஆத்திரப்பட்டார் அவர். அப்பொழுது அவருக்கு செல்வாக்கு இருந்தது, அந்த வாலிபனுக்கு நல்லவெகுமதி கொடுத்து அனுப்ப. அந்த வயதில் அவர் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜனரல் உத்யோகத்திலிருந்தார்.

அவனை மன அமைதியுடன் அழைத்தார். “மாடியைப் பார்த்துக்கொண்டே போனையே. என்ன அதிசயத்தைக் கண்டாய்?” என்று கேட்டார்.

‘ஒன்றுமில்லை’ என்று பசப்பினன் அவ்வாலிபன்.

“மாடியில் அழகான ஒரு பெண் இருக்கிருளே என்று பார்த்தாயாக்கும்” என்று கேட்டார் குறும்புச் சிரிப்புடன்.

அவன் திருட்டு முழி முழித்தான்.

“உன்வீட்டு மாடியில் உன் தாயார் நின்றுகொண்டிருந்த சமயம் வேறொருவன் இப்படிப் பார்த்துக்கொண்டு சென்ருல் எப்படி வீரனுகி விடுவாய் நீ” என்று கேட்டார்.

காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். நல்ல வார்த்தை சொல்லி அவனையனுப்பிவைத்தார் அவர்.

இதை எல்லாம் பார்த்துக்கொண்டு, தனது புருஷனின் உத்தமமான குணத்தை வியந்து நோக்கினுள்.

கார்மேகம் இடம் விட்டு ஓடுகிறது என்ருல் அது எங் காவதுசென்று மழையாகப் பொழியத்தானே வேண்டும். அதை அவள் நினைக்கவே இல்லை.

கூடத்திற்கு வந்து கோட்டைக் கழற்றி எறிந்தார் ஒரு மூலையில். மனைவி அங்குவந்து சேர்ந்தாள்.

“நீ என்ன வேசியா மாடியில் நின்றுகொண்டு போவோரையும், வருவோரையும் பார்த்துக்கொண்டிருக்க?” என்று கேட்டார் கோபத்துடன்.

அலக்ஷியமாக இருந்துவிட்டாள் அவள்.

"அதென்ன? என்று மில்லாத கோணவகிடு!" என்றார். அதற்கும் பதில் கூறவில்லை. அந்த அலங்காரத்தைக் கலைக்காமலும் இருந்தாள். அது அவரை உதாசீனப்படுத்துவதாக அவர் மனதில் குத்தியது. ஆத்திரமடைந்தார். அறம் புறம் பார்க்காமல் நன்றாக அடித்துத்தள்ளினார். இதெல்லாம் கண்டிக்க வேண்டிய காரியம்தானே?

அடியை வாங்கிக்கொண்டு, அவளும் உள்ளே சென்று படுத்துவிட்டாள். அவரும் சாப்பிடக்கூட இல்லாதுவெளியே சென்றுவிட்டார்.

இரவு எட்டு மணி இருக்கும். திரும்பிவந்தார் லக்ஷ்மிபதி. இலைபோட்டு வைத்துக்கொண்டு காத்துக்கொண்டிருந்தாள் அவர் தர்மபத்தினி. வந்தவர் நேரே தம் அறைக்குச்சென்று சோபாவில் சாய்ந்தார்.

கணவன் சாப்பிட வாராததுகண்டு அவளுக்கு துக்கம் அதிகரித்தது. தன் மீது தான் குற்றம் என உணர்ந்தாள். கதறியழுது அவர் காலைப்பிடித்துக்கொண்டு கெஞ்சினாள் மன்னிப்புக்காக. இப்படி எந்தப்பத்தினி இருப்பாள்? இப்படிப் பட்டவளையே ஆட்டிவைத்தான் புண்ணியவான்.

அப்படிப்பட்ட உத்தமியின் வயிற்றில் பிறந்திருக்கிறாள் இந்தப் படாமுனி. அவளையும் கல்யாணியையும் ஒத்திட்டு நினைக்கும்பொழுது துக்கம் அதிகரிக்கிறது.

இந்த நினைவைத்தான் அந்தத் தந்திரக்கார மாயாவி என்னும் ஞாபகசக்தி, லக்ஷிமிபதிக்கு ஒரு சித்திரத்தின் மூலம் பாழ்வெளியில் உருவமற்ற சக்தியைக்கொண்டு எழுதிக்காண்பித்தது.

## கல்யாணப் பேச்சு.

நல்ல ஆடை கட்டிக்கொள்ளக்கூடாது என்று அவர் கூறவில்லை. சந்தோஷமாக இருக்கக்கூடாது என்றும் சொல்லவில்லை. நம் ஆசாரப்படி இரு. நம் சமூகத்திற்குத் தகுந்தாற்போல உடையுடுத்திக்கொள். அந்த மேல் நாட்டு நாகரீகத்தில் ஆழ்ந்து அந்த அர்த்தமற்ற ஆசைகளுக்கெல்லாம் இடம் கொடுக்காதே என்று தான் சொல்லுகிறார். இது தான் கல்யாணிக்கும் பிடிக்கவில்லை.

அவள் சொல்லுகிறாள்: ஐரோப்பாவைப் பார். பெண்களுக்கு எவ்வளவு சுயேச்சை; சுவதந்திரம். ஆண் பெண் எவ்வளவு ஒற்றுமையாக இருக்கிறார்கள் என்று.

அவரும் எவ்வளவோ தரம் சொல்லியிருக்கிறார். அந்த தேசங்களிலே எழுபது சத வீதம், ஒரு பெண்ணின் ஜன்மாவிலே எண்ணிக்கையற்ற விவாகம். இது தான் கற்பா?

ஆம் என்கிறாள் அதற்கும்; அவள் ஒரு சண்டி.

இந்தக் கவலையினாலேயே உடல் குன்றிப் போய் அந்தக் கொடிய காச கிருமிகளுக்கு தன் சதையை இரை கொடுப்பது போதாதென்று, அந்தப் பாழும் பெண்ணுக்காக தன் உயிரை வீணாக மாய்த்துக்கொள்ளுகிறார்.

படுத்த படுக்கையாகி விட்டார் லக்ஷ்மிபதி. அந்த காச ரோகத்தை நிவர்த்திக்க வழியில்லை. அந்தப் பெண்ணை திருத்தவும் ஆற்றலில்லை.

அவரது நிலைமை நாளுக்கு நாள் க்ஷீண திசையையே யடைந்தது. அவர் எப்பொழுதும் வாடிய முகத்துடனும் அழுத கண்ணுமாகவே தென்பட்டார்.

கல்யாணிக்கும் கொஞ்சம் புத்தி வந்துவிட்டது போலும் அப்பாவுக்கு அடிக்கடி தேறுதல் கூறுவாள். தான் திருந்தி விட்டதாகக் கூறி தகப்பனின் ஆசியைப் பெறுவாள்.

“ அப்பா! அப்பொழுதெல்லாம் சிறு பெண்ணாய் இருந்தேன். நீ இருக்கிறாயே என்று ஒரு தைரியம். ‘தாம் தூம்’ னு இருந்தேன். இப்போ நான் என்ன சிறு குழந்தையா அப்பா?

“அப்பா, கொஞ்சம் கூட கவலைப்படாதே. நான் இருக்கேன். உனக்கு வேண்டியதை எல்லாம் செய்கிறேன். சீக்கிரம் எழுந்து விடுவாய்” என்று கூறுவாள். உள்ளம் மகிழ்ந்து, புளங்காகிதமடைவார் பிதா: அவர் சொல்லுவார்.

“ உனக்கு வயதாய் விட்டது கல்யாணி. நானும் எத்தனை நாளைக்கு இப்படியே இருக்கப் போறேனோ தெரியாது. உனக்கு கல்யாணம் செய்ய வேண்டாமா? கல்யாணமான பின்பாவது சமர்த்தாக இருப்பாயோ? ”

"நீங்களாகப் பார்த்து கல்யாணம் செய்து வைக்கப் போகிறீர்களா அப்பா? வரப்போகிறவர் நல்லவரா கெட்டவரா என்று நான் கண்டேனா? பின்னால் வாழப்போவது நான் தானே?" என்றாள் கல்யாணி.

"யாரையாவது சொல் கல்யாணம் செய்து வைக்கிறேன்."

"காதல் மணம் தான்.........

"போடி அசடே காதல் என்று சொல்வதெல்லாம் வீண் மயக்கம். கவிகளின் கற்பனை. அர்த்தமற்ற பேச்சு. இதையெல்லாம் உண்மையென்று நம்பி கெட்டுப்போகாதே," என்றார் அவர்.

அவர் சொல்வது அவள் காதில் நுழைந்தால் தானே? அவள் பிடித்த முயலுக்கு மூன்றே கால் தான்!

## மாயக்குழல்.

---

ஒரு நாள் காலை, அப்பாவின் வேஷ்டியைக் காயப் போட மொட்டை மாடிக்கு ஏறி வந்தாள். அந்தச் சமயம் புல்லாங்குழல் நாதம் 'கும்' மென்று கிளம்பி வான வெளியில் அதியற்புதமாக நர்த்தனமாடிக் கொண்டிருந்தது.

ஆஹா. என்ன குழலோசை! அந்த நாதத்தின் சக்தியானது காசரோகத்தால் கஷ்டப்படும் லக்ஷ்மிபதியின் ஹிருதயத்தில் புகுந்து, ஹிருதயத்தை அரித்துக்கொண்டிருக்கும் புழுக்களைக்கூட அசத்தி விட்டது!

வீதியில் ரிக்ஷா இழுத்துச் சென்றவன் வண்டியை கீழே போட்டு விட்டு, அதில் மனதைப் பறிகொடுத்து நின்றான்.

அந்த வட்டாரத்திலே, கார்கள் பறவைக் கூட்டம் போல் பறந்தோடும் நடு சந்தியிலே—வழி விலக்கிக் காட்டும் அந்தப் போலீஸ்காரனின் கண்களில் மண்ணைத் தூவி விட்டு அவன் கைகளையும் கட்டி விட்டது அந்த மாயக்குழல்.

வீதியில் செல்லும் ஒவ்வொரு மனிதனையும் நடு வீதியில் திகைத்து நிற்க வைத்தது.

வீதியில் செல்லும் பிச்சைக்காரன் கையிலிருந்து ஓடு நழுவி விழுவது கூடத் தெரியாது அதில் மயங்கிக் கிடக்கிறான்.

கல்யாணிக்கு ஒருவித தொந்தரவும் கொடுக்காமல் அவள் ஹிருதயத்தைத் திருடி, அதைத் தூக்கிக்கொண்டு நர்த்தனமாடத் தொடங்கியது அந்த சக்தி.

அதனால் ஏற்பட்ட பலன்: கொடியில் காயப்போட வேண்டிய ஆடைகளை சுவற்றில் போடுகிறாள். அது பறந்து சாக்கடையில் விழுகிறது. கீழே கிடக்கும் பாயைத் தூக்கி கொடியில் போடுகிறாள். பைத்தியக்காரச் செயல்களை எல்லாம் செய்யத் தூண்டியது அந்த உருவமற்ற சக்தி.

குழலோசை வந்த திசையை நோக்கினாள் கல்யாணி. அடுத்த வீட்டு மாடியிலிருந்து வந்து கொண்டிருந்தது.

ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். ஒரு வாலிபன் தன்னையும் மறந்து குழல் வாசித்துக் கொண்டிருக்கிறான். அவனு எட்டிப்பார்க்கும் கல்யாணியைக் கவனிக்கப் போகிறான்.

என்ன நினைத்துக் கொண்டாளோ அவள். அங்கு தனியாக நிற்பது பிசகென எண்ணினாள். கீழே இறங்கி அப்பாவின் அருகில் வந்து பொம்மை போல் உட்கார்ந்து விட்டாள்.

குழலோசை நின்றது. போலீஸ்காரனின் கை தானாகவே வழி காட்டியது. கீழே கிடக்கும் ஓட்டை கையிலெடுத்தான் பிச்சைக்காரன். மாந்தர்கள் மனம் தன் வழி சென்றது. அந்தக் கொடியக் காசக் கிருமிகளும் உயிர் பெற்று லக்ஷ்மிபதியின் ஹிருதயத்தைத் துளைக்கத் துடங்கி விட்டது. வேதனை தாங்கமாட்டாது துடி துடி தார் அவர்'

அந்த இளைஞன் யார்? பிரபல புல்லாங் குழல் வித்வான் வைத்தியனாதய்யரின் ஏக புதல்வன் சுந்தரேசன். பி. ஏ. வரையிலும் படித்திருக்கிறான். இத்தனை நாட்களாக ஓர் கிராமத்தில் சிக்ஷை பெற்று வந்தான்.

அப்பியாசங்கள் முடிந்து விட்டது. குருவின் பூர்ண அனுக்கிரஹத்தையும் பெற்று விட்டான். இனி அவனது புகழ் சுடர் விட்டு எரியக் கேட்பானேன்.

தாய் தந்தையற்ற அவன் தாய் மாமனின் சம்ரக்ஷ ணையின் கீழ் வாழ்ந்து வந்தான். இப்பொழுது அவனுக்கு வயது இருபது. தகப்பனின் வார்சுக்கு வந்து விட்டான்.

குக்கிராமத்தில் என்ன வேலை. அவனுக்கு

தன் தகப்பனர் பிரபலமாக இருந்த காலத்தில் அந்த வீட்டில் வாழ்ந்து வந்தார். அது அவரது சொந்த வீடு. தகப்பனைப் போல கீர்த்தியடைய, அவர் பிதா கீர்த்தி பெற்ற இடத்திற்கே வந்து விட்டான்.

பி. ஏ. வரையிலும் படித்த அவன் இந்த வழியில் முன்னுக்கு வரக் காரணமே தனி. அவன் பிதா சாகும் பொழுது அவனிடம் கூறி சென்றார்.

'வேண்டிய செல்வமிருக்கிறது. உன் வாழ் நாள் முழுவதும் உழைக்காமல் சாப்பிடப் போதுமானது. தகப் பன் பெயரை நிலைநாட்டுவது புதல்வன் கடமை. என் தொழிலையே நீ பின் பற்று' என்று கூறி அந்த குழல் வாத் தியத்தை அவனிடம் கொடுத்து மறைந்தார்.

தகப்பனின் கடைசி ஆசை; அவனது ஆர்வம்; குரு வின் ஆசி; இவைகள் இருக்கும் பொழுது அவன் திறமையைப் பற்றி கேட்கவா வேண்டும்.

தன் புகழை நிலை நாட்ட நகரத்துக்கு வந்து விட்டான். புகழ் பெற்றே தீருவான்.

# குழலோசை நின்றது.

அன்றைய நிகழ்ச்சியிலிருந்து அவள் மனம் ஒரு நிலையில் உல்லை. பித்துப் பிடித்தவள் போல் எதை யெதையோ எண்ணிக் கலங்கினுள். தகப்பனுர் வெந்நீர் கேட்டால், மருந்து எடுத்துக் கொடுப்பாள், மருந்து கேட் டால் காபி கொண்டு வருவாள்.

கல்யாணியின் புதிய மாறுதலைக் கண்டு திடுக்கிட்டார் லக்ஷிமிபதி. அவளை அழைத்துக் காரணம் கேட்டார். அப்பொழுதெல்லாம் தன் முகத்தை மாற்றி வைத்துக் கொள்ளமுயலுவதை அநேக தடவைகள் கண்டார்.

"நான் இருக்கும் பொழுது உனக்கு என்ன கவலை? ஏன் வருத்தப் படுகிருய். நான் உன்னை ஏதாவது கோபித்துக் கொண்டேனு?" என்றெல்லாம் கேட்பார்.

எதையோ நினைத்துக் கொண்டு மாடிப்படி வழியாக ஏறுவாள். பாதி தூரம் சென்றதும், வேறு எதையோ நினைத்துக் கொண்டு கிழே இறங்கி விடுவாள். இப்படியாக அவளை ஆட்டிவைத்தது ஓர் வியாகூலம்.

பாவம்! அவள் மாடிக்குச் செல்வதெல்லாம் அந்த புல் லாங்குழல் மோகனனிடம் தன் மனதைப்பறிகொடுத்துத் தான். ஆனல் அவன் தன்னைப்பற்றி என்ன நினைப்பானே என்று எண்ணும்பொழுது கிழே இறங்கிவிடுகிருள்.

அசட்டுத்தைரியம் வந்தது. கொடியில் காய்ந்துகொண் டிருந்த பிதாவின் வேஷ்டியை எடுக்கப்போவதாக ஒரு 'நொண்டிச்சாக்கு' வைத்துக்கொண்டு வேகமாக மாடிக்கு ஏறிவிட்டாள் கல்யாணி.

மொட்டை மாடியின் தளத்திற்கு வர இன்னும் இரண்டு படிதான் பாக்கி. மெல்லிய த்வனியில் தவழ்ந்துகொண்டிருந்த குழலோசை உச்சஸ் ஸ்தாயையில் ஏற ஆரம்பித்தது.

அப்பொழுது சாயந்திரவேளை. வாலிபன் குழலை எடுத்து விட்டான். அந்திப்பொழுதுக்கேற்ற ராகத்தில் வாசிக்க ஆரம்பித்தான்.

மாயாசக்தி, தனது இரண்டாவது வலையை கல்யாணி மீது வீசிவிட்டது. அவள் அந்தக் கைப்பிடிச் சுவற்றின் மீது அசைவற்று உட்கார்ந்துகொண்டு, சுந்தரேசன் என்ன ராகத் தில் குழல் வாசிக்கிறானோ, அதே ராகத்தில் பாட ஆரம்பித்து விட்டாள்.

சுந்தரேசனின் குழலோசையையும், ஆழ்ந்து அதில் லயித்துக்கிடந்த அவன் கவனத்தையும் தாண்டி, அவன் புலன்களைத்தட்டி எழுப்பியது கல்யாணியின் சாரீரம்.

அதில் மயங்கிக்கிடந்த அவன், கனவினின்றும் விழித்த வன்போல் எழுந்து, மறுபடியும் கல்யாணி பாடுவதற்கேற்றாற் போல அதைத்தொடர்ந்து வாசிக்க ஆரம்பித்தான்.

யார் பாடுகிறார்கள் என்பது அவனுக்குத்தெரியாது. அந்தப்பாட்டை மட்டிலும் பின் பற்றினான். இவ்வளவு அழகாகப் பாடும் பெண் அழகில் எப்படி இருக்கவேண்டும். அதைப்பார்க்க ஆசைப்பட்டான் அவன். உதட்டுடன் ஒட்டிக்கொஞ்சிக் குலாவும் குழலைப் பிரிக்காமலும், தொடர்ச்சியை விடாமலும் எழுந்துவந்து ஜன்னல் கதவைத் திறந்தான்.

கல்யாணியைக்கண்டதும், தன்னையும்மறந்து அவளையே பார்த்துக்கொண்டிருந்ததில் அவன் கண்களே மங்கியது போல் தோன்றின. ஒருவித காந்தம் அவனை இழுத்தது. குழலின்மீது கைகள் நர்த்தனமாட மறுத்தது. குழலும் கையைவிட்டு நழுவியது.

குழலோசையும் நின்றது. பாடுவதை நிறுத்தினாள் கல்யாணி அவள் அவனைப்பார்த்தாள். அவன் தன்னையே பார்த்துக்கொண்டிருப்பதைப் பார்த்தபொழுது அவளுக்குச் சிரிப்பு வந்தது. அடுத்த நிமிடம் முகத்தைத் திருப்பிக்கொண்டு கீழே இறங்கிப்போய்விட்டாள்.

## பேஷ். கல்யாணி!

---

சுந்தரேசனின் மனம் ஒரு நிலையிலில்லை. ஜன்னலண்டை நின்றுகொண்டே இருந்தான். அந்த ஜன்னல் வழியாகப் பார்த்துப்பார்த்து அநேக தரம் பெருமூச்சுவிட்டான்.

அன்று இருவர் மனமும் ஒரு நிலையில்தான் இருந்தது. இருவருக்கும் தூக்கமே கிடையாது. படுக்கையில் புரண்ட படி யோஜனை. ஆனால் கல்யாணியின் நிலைமைதானே நமக்கு முக்கியமானது.

'யாரது ஜன்னல் கதவைத்திறப்பது?' என்றுகேட்டாள் கல்யாணி.

'நான் தான்—சுந்தரேசன்' என்றது வந்த உருவம்.

"சுந்தரேசனு எங்கே வந்தே?"

"கல்யாணி............... அவன் முகம் கொஞ்சும் பாவனை யில் இருந்தது.

"கல்யாணி நான் உன்னைக் காதலிக்கிறேன். என்னை நீ கல்யாணம் செய்து கொள்ளமாட்டாயா?"

அந்தச்சமயம் பார்த்து எங்கிருந்தோ முளைத்தார் லக்ஷ்மிபதி.

"அம்மா கல்யாணி. நான் எவ்வளவுதாம் சொல்றது. காதலாவது, பாசமாவது எல்லாம் பொய்" என்றார்.

கல்யாணியின்முகம் மாறுபட்டது. அப்பொழுது அவள் கேட்டாள்: "சுந்தரேசா! அப்பா இப்படிச் சொல்றாரே."

"கல்யாணி. நீ சுத்த அசடு. கிழங்கட்டைகள் அப்படித் தான் உளரும். காதல் தெய்வீகமானது. அதைத்தடுக்க அந் தக்கடவுளே வந்தால்கூட முடியாதே" என்றான் சுந்தரேசன்.

அப்பொழுது லக்ஷ்மிபதி முகத்தில் அசடுதட்டியது. "ஆமம்மா! நான் கிழடு. நான் பேத்தறேன். உங்கள் மனம்

போல செய்யுங்கோ. எங்கேயாவது கண்ணைக் கசக்காமல் இருந்தால் சரி" என்று சொல்லிவிட்டு மறைந்தார்.

அந்த இளம் காதலர்கள் இருவரும் சேர்ந்து சிரித்த சிரிப்பானது லக்ஷிமிபதியின் பிடரியைப் பிடித்து எக்கியது.

அப்பொழுது சுந்தரேசன் சொல்லுகிறான்: "கல்யாணி! நீயும் நன்னாப் பாடுகிறாய். நானும் ஒரு குழல் வித்வான். இரண்டு பேரும் சேர்ந்தால் எவ்வளவு சம்பாதிக்கலாம் தெரியுமா?"

கல்யாணிக்கு ஆனந்தம் அள்ளிக்கொண்டுபோகிறது.

நடு இரவில் கல்யாணி சிரிக்கும் சப்தம்கேட்டு வாதனையால் கஷ்டப்பட்டுக்கொண்டு விழித்திருக்கும் லக்ஷிமிபதியின் செவிகளில் அறைந்தது. என்னவோ ஏதோ என்று கல்யாணி படுத்திருந்த அறைக்கு வந்தார். தூக்கத்தில் கல்யாணி புலம்பிக்கொண்டிருப்பதைக் கண்டார்

அவளை எழுப்பினார். அப்பா முண்டம்போல் எதிரில் நிற்கிறார். மெழுகுவர்த்தி விளக்கு மங்கலாக எறிந்துகொண்டிருக்கிறது. சுந்தரேசனை அங்கு காணவில்லை.

"என்ன சொர்ப்பனம் கண்டே கல்பாணி?" என்று கேட்டார் அவள் பிதா. அப்பொழுதுதான் அவள் அறிந்தாள் மணக்கோட்டையின் பிரதிபலிப்பு கனவாகத் தெரிந்திருக்க வேண்டுமென்று.

# பாவம்! ஒன்றுமே தெரியாது.

மறுநாள் முழுவம் அதே ஜன்னலண்டை நின்றுகொண்டிருந்தான் சுந்தரேசன். அடுத்தவீட்டு மாடிப்படியில் யாரோ ஏறிவரும் சப்தம் கேட்டது. சந்தேகமில்லை. அவளேதான் வருகிறாள். ஒரு மூலையில் மறைந்துகொண்டான். அவளும் ஜன்னல் வழியாக எட்டிப்பார்த்தாள். சுந்தரேசன் அவள் கண்களுக்குத் தட்டுப்படவில்லை. அங்கேயே நின்றுகொண்டிருந்தாள்.

ஒரு சிறு குரல், யாரோ பாடும் சப்தம்

'அள்ளியணைத்திடவே — என் முன்னே
ஆடிவருந்தேனே................

என்று பாடிக்கொண்டே ஜன்னலெதிரில் வந்துநின்ருன். அவன்.

திடுக்கிட்டு நின்றுவிட்டாள் கல்யாணி.

''நீ நன்ருகப் பாடுகிருய். ஆனல் வெளியில் நின்று பாடுவதால் உன் குரலை சரியாகப் பின்பற்றமுடியவில்லை. உள்ளே வந்து பாடேன்.'' என்ருன் சுந்தரேசன்.

இவன் இப்படி எல்லாம் செய்வானென்று கல்யாணி எதிர்பார்க்கவே இல்லை. ஒருவாறு சமாளித்துக்கொண்டாள். "இல்லை. அப்பாவோட வேஷ்டியைக் காயப்போட வந்தேன்........... பிறகு வருகிறேனே." என்று கூறிச்செல்ல அடி எடுத்து வைத்தாள்.

"சரிதான். வேஷ்டி காயப்போட அடுத்தவீட்டில் இடமிருக்கோ என்று பார்த்தாயாக்கும்" என்று அவன் சிரித்துக் கொண்டே கூறியதைப்பார்த்து அவளும் சிரித்தாள்.

"ரொம்ப பிகு பண்ணுமல் சுச்சிதமா இரண்டு பாட்டுப் பாடு பார்ப்போம்" என்று கூறிக்கொண்டே குழலைக் கையி லெடுத்தான் சுந்தரேசன். போதையில் இருக்கும் அவள் மறுத்துக்கூறுவது எங்கே? பாட ஆரம்பித்தாள்.

இருவர் பழக்கமும் அதிகரிக்க ஆரம்பித்தது. 'அம்மா கல்யாணி' என்று கூப்பிடும் காலமெல்லாம் போய் 'அடி கல் யாணி' என்று கூப்பிட ஆரம்பித்தான். எட்டடி நின்று பேசும் அவன் கட்டித்தழுவிப்பேசுகிருன். அவளும் இதற்கெல்லாம் சம்மதித்துத்தான் இருக்கிருள்.

ஒரு நாள் நடந்த சம்பவமிது. லக்ஷ்மிபதி சோபாவில் சாய்ந்துகொண்டிருக்கிருர். கல்யாணி அங்கே வந்தாள்.

"வாம்மா கல்யாணி" என்றழைத்தார் அருமையுடன்.

"அப்பா! நான் ஒன்று கூறுவேன். மாட்டேனென்று சொல்லக்கூடாது" என்று பீடிகை போட்டாள் கல்யாணி.

"நீ சொல்வதற்கு தடை எது. நன்ருய் கேளேன்"

"நான் ஒரு வாலிபனைப் பார்த்துவைத்திருக்கிறேன்.......

"சரி சரி........ காதலிக்கிருயாக்கும்! என்ருர் அவர்.

அப்பாவிடம் காதல் சமாசாரமெல்லாம் செல்லாது என்பது அவளுக்குத் தெரியும். அதனால் பேச்சை மாற்றி "இல்லை அப்பா. அதெல்லாம் ஒன்றுமில்லை. அடுத்தவீட்டு மாமி சொன்னாள்; அவாத்திலே ஒரு பையன் வந்திருக்கானும் பி. எ., பாஸ் செய்திருக்கிறான். நல்ல குணசாலி. பெரிய புல்லாங்குழல் வித்வான்......." என்று அடுக்கிக்கொண்டே போனாள் கல்யாணி.

"இவ்வளவுதானே! பேஷா செய்யறது. ஆனால் அவன் உன்னைக் கல்யாணம் செய்துகொள்வானோ!" என்றார் பிதா.

"நான் அவரைப் பார்க்கவேயில்லை. மாமி கிட்டே சொல்லி கேட்க சொல்லுகிறேன்." என்று சொல்லி விட்டு கண்ணைச் சிமிட்டிக் கொண்டே சென்றாள் வெளியே.

பாவம்! அந்த மனுஷி லக்ஷ்மிபதி கண்களில் மண்ணைத் தூவி விட்டு ஒழிந்த நேரமெல்லாம் சுந்தரேசனுடன் ஆனந்தமாகக் காலத்தைப் போக்கினாள். இதை யெல்லாம் படுத்த படுக்கையாய்க் கிடக்கும் லக்ஷ்மிபதி எப்படியறிவார்.

## கெட்டி மேளம் கொட்டுகிறது.

---

லக்ஷ்மிபதியோ நாளுக்கு நாள் க்ஷீணமடைகிறார். பெண்ணோ தக்க பருவமடைந்து மலையாக நிற்கிறது. ஊரரோ பெண்ணை இப்படி வைத்திருப்பதில் தூஷிக்கின்றனர். அவர் எந்தக் கஷ்டத்திற்குத் தான் ஆளாவார்?

எழுந்து நிற்கவும் சக்தியில்லை. தான் பிழைக்கப் போவதாகவும் நம்பிக்கைகிடையாது. பல பேர் தூண்டுதலின்பேரில் மதனப்பள்ளி காசரோக ஆஸ்பத்திரிக்குச் செல்லவேண்டி எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டார்.

நாளைப் புறப்படப் போகிறார் தன் பெண் ஒருவள் இருக்கிறாளே அவளைத் தன் உதவிக்காகக் கூப்பிட்டார். கள்ளி கல்யாணி எப்படி சுந்தரேசனை விட்டு வர முடியும். இல்லாத பொய்யெல்லாம் சொல்லி வர முடியாதென்று கூறினாள்.

இவள் உதவி செய்தால் தான் வியாதி தீருமா? அதற்காக அவர் அழைக்கவில்லை. கர்மச்சக்கரம் சுற்றுகிறது. காலம் எப்படி எப்படியோ? வியாதி சௌக்கியமடைய ஆஸ்பத்திரி செல்லுகிறார். விதி வேறாக இருக்கலாம். அங்கேயே இறந்து விட்டால்? தான் சாகும் பொழுது தன் பெண்ணாவது பக்கத்தில் இருக்க வேண்டுமென்று ஆசை தான்.

இதை யெலலாம் எடுத்துச் சொன்ன பின் தான் கல்யாணியும் சம்மதித்தாள், காதலன் என்று சொல்லிக் கொள்ளுகிறானே—அந்த சுந்தரேசனிடமிருந்து கூட அவள் பிரியா விடை பெற்று விட்டாள்.

வீட்டு வாசலில் வண்டி நிற்கிறது. சாமான்களெல்லாம் ஏற்றியாகி விட்டது. லக்ஷிமிபதியும் வண்டியிலேறி விட்டார். இதையெல்லாம் மொட்டை மாடியில் நின்று கொண்டு பார்த்துக் கொண்டிருக்கிறான் சுந்தரேசன்.

கடைசி முறையாக விடை பெற்றுக்கொள்ள சுந்தரேசனை நோக்கினாள் கல்யாணி. சுந்தரேசன் இவளைப் பார்த்தால் தானே? அவன் எதிர் வீட்டு மாடியில் எதையோ கவனத்துடன் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

கல்யாணிக்குப் பொறுமைத் தீ கொழுந்து விட்டு எரிய ஆரம்பித்து. கண்களில் நீர் பொங்கியது, எல்லாவற்றிற்கும் காரணம் எதிர் வீட்டு மாடியில் சுந்தரேசன் பார்க்கும் படியான பொருள் பெண்ணைத் தவிர வேறு எதாக இருக்க முடியும்.

இப்பொழுது நிகழ்ந்த எல்லாவற்றையும் கவனித்து விட்டார் லக்ஷிமிபதி. அவர் மனதிலும் பற்பல எண்ணங்கள்; சந்தேகங்கள்.

காரும் மதனப்பள்ளியை நோக்கி கிளம்பி விட்டது.

அவர்கள் புறப்பட்ட வேளை நல்ல வேளை தான். சென்ற மட்டிலும் கொஞ்சம் குணம் தெரிந்தது. அதற்கு மேல் சௌக்கியம் பார்க்க முடியாது. அவஸ்தைப்படாமல் இன்னும் ஆறுமாதம் இருக்கலாம். மறுபடியும் வந்தே தீரும். அதுவே முடிவு காலத்தையும் நிர்ணயிக்கும்" என்று கூறி திரும்ப ஊருக்கு அனுப்புவித்தார் டாக்டர்.

வைகாசி மாதம் லக்ஷிமிபதியும், கல்யாணியும் ஊருக்குத் திரும்பி வந்தார்கள்.

தூரத்தில் கார் வரும் பொழுதே அடுத்த வீட்டைத் தான் பார்த்துக் கொண்டு வந்தாள். அடுத்த வீட்டு வாசலில் பெரிய பந்தல் போட்டிருப்பது அவள் கண்களுக்குத் தெரிந்தது. யாருக்காவது கல்யாணமாயிருக்கும் என்று எண்ணினுள்.

வீட்டு வாசலில் கார் வந்து நின்றது. கல்யாணி இறங்கினுள். அப்பொழுது தான் மேளகாரன் 'கெட்டிமேளம்' வாசித்தான். யாருக்குக் கல்யாணம் என்று தெரியாமல் உள்ளே சென்ருள் கல்யாணி.

வீட்டிற்குள் சென்று ஐந்து நிமிடம் இருக்காது, எதிர் வீட்டு மாமி அங்கே வந்தாள், கல்யானியை கூப்பிட.

"என்ன மாமி?"

"என் பெண்ணுக்குக் கல்யாணம். மஞ்சள் குங்குமத்துக்கு வா" என்றழைத்தாள்.

"பிள்ளை யாரு மாமி" என்ருள் கல்யாணி.

"எல்லாம் வந்து பாரேன்" என்று இழுத்துச் சென்ருள் அந்த அம்மாமி.

மணையில் உட்கார்ந்திருக்கிருர்கள் பெண்ணும் பிள்ளையும். மாப்பிள்ளையைப் பார்த்ததும் திடுக்கிட்டுப் போனுள் கல்யாணி. முகத்தை இரு கைகளாலும் மூடிக்கொண்டு வெளியே ஓடினுள்.

# மாப்பிள்ளைக்கு பைத்தியம்.

மனையில் மாப்பிள்ளை ஸ்தானத்தில் உட்கார்ந்திருப்பவர் தான் சுந்தரேசன்.

கல்யாணி அங்கே வந்திருந்தபொழுது சுந்தரேசனும் அவளைப்பார்க்காமலில்லை. பார்த்ததும் தலை குனிந்து கொண்டான்.

அந்தக் கல்யாணம் சுந்தரேசன் சம்மதித்தே தான் நடந்தது. காதல் மணம் என்றுகூடச் சொல்லிக்கொள்கிறார்கள்!

அன்று கல்யாணி லக்ஷிமிபதியுடன் மதனபள்ளிக்குப் புறப்படும்பொழுது மாடியில் நின்றுகொண்டிருந்தான் சுந்தரேசன். அப்பொழுது எதிர் வீட்டில் ஒரு பெண் நின்று கொண்டிருந்தாள். அவன் கண்களுக்கு அவள் கல்யாணியைக் காட்டிலும் அழகாக இருந்தாள். ஒரு புஷ்பத்திலுள்ள தேனை உருஞ்சிய பின் வண்டு வேறொரு பூவைத் தேடிச்செல்வது சகஜம் தானே!

வீட்டிற்குள் சென்றதும் முதலில் தென்பட்டது அந்த ஜன்னல். பழைய நினைவுகள் ஓடின. அவளையும் அறியாமல் ஏளனச் சிரிப்பு சிரித்தாள். அப்பொழுது தான் அப்பா சொன்ன வார்த்தைகளெல்லாம் ஞாபகத்திற்கு வந்தது.

கல்யாண தினத்தன்று மாலை. வாசலில் போட்டிருக்கும் பந்தலில் பெண்ணும் பிள்ளையும் நலங்கு உருட்டிக்கொண்டிருக்கிறார்கள். எங்கும் கேளிக்கையும் களியாட்டமும். எல்லோர்

தலைக்கும் உச்சியிலே மாடிமீது கண்ணீரும் கம்பலையுமாய் நிற்கிறாள் கல்யாணி.

அந்த கலங்கு மத்தியிலே மெல்லிய குரல் ஒன்று; வர வர சப்தம் அதிகரிக்கிறது. யார் பாடுவது என்று தெரியாமல் விழிக்கிறார்கள் எல்லோரும். அந்தக் கூட்டத்திற்குள்ளே ஒரே ஒரு ஆத்மாவிற்குத்தான் அது யாரெனத்தெரியும்.

சற்று நேரத்தில் அந்தப் பாட்டானது அழுகையுடன் கலந்துவருகிறது. மனம் கலங்கி தத்தளிக்கிறான் சுந்தரேசன்.

"அடியே! மாப்பிள்ளையைப் பாரடி. என் அழறான்" என்கிறாள் ஒருவள்.

"என் மாப்பிள்ளை அழறேள்?" என்று கேட்கிறாள் மாமியார். அந்த ஒரு நிமிடத்தில் எல்லோரையும் கலங்கவைத்து விட்டது அந்தப் பாட்டு.

மாப்பிள்ளை மணையைவிட்டு எழுந்து ஓட ஆரம்பித்து விட்டார். எல்லோரும் பின் தொடர்ந்து ஓடுகிறார்கள். தன் வீட்டுமாடிக்கு ஓடுகிறான். பழைய பழக்கமான ஜன்னலருகே வந்து நின்று............

"கல்யாணி............! கல்யாணி........ ..." என்று கதறினான்.

ஜன்னல் அப்பொழுது திறந்துதான்கிடந்தது. கல்யாணியும் நின்றுகொண்டுதானிருக்கிறாள். ஆனால் அவள் மனதில் இந்த லோக சிந்தனையில்லை. மனம் போனபடி பாடிக்கொண்டிருக்கிறாள்.

"கல்யாணி! என்னைமன்னித்து என்னிலும் கன்நிறைந்த பிள்ளையாகப் பார்த்து மணம் செய்துகொண்டு சுகமாக இரு. இந்தப் பாபியின் மனதை அடிக்கடி இழுத்து, ஈட்டியால் குத்தாதே" என்று கதறுகிறான்.

"நன்றாயிருக்குடா, நலங்குக்கு மத்தியிலே பைத்திய மாட்டமா வந்துட்டயே"என்று அவனை இழுத்துச்சென்றாள் அவன் தாய்.

இவ்வளவு அமர்க்களத்தில் லக்ஷ்மிபதி ஆழ்ந்து நித்திரை செய்கிறார்.

தள்ளாடிக்கொண்டுவந்து படுக்கையில் சாய்ந்தாள் கல் யாணி. அப்பொழுது படுத்ததுதான். கவலை, துக்கம், அவ மானம் எல்லாம் நெஞ்சைப் பிடுங்கித்தின்றது. முடிவில் ஜுரத்தில் கொண்டுவந்துவிட்டது.

லக்ஷ்மிபதி தன் தேகத்தைக் காப்பாற்றிக்கொள்வாரா? கல்யாணிக்குத்தான் உபசாரணை செய்ய முடியுமா?

கல்யாணிக்கு ஜுரத்தின் வேகம் தாங்கமுடியாது பல விதமாகப் புலம்ப ஆரம்பித்துவிட்டாள். டாக்டர்களும் எவ் வளவோ பாடுபட்டனர்.

அப்பொழுது இரண்டு மூன்று டாக்டர்கள் சேர்ந்து ஏதோமெதுவான குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள். இதைக் கண்ட லக்ஷ்மிபதிக்கு இன்னும் பயம் அதிகரித்தது. உயிருக் கே ஆபத்து போலும். அதனால் டாக்டர்கள் சொல்லமாட்டா மல் தவிக்கிறார்கள் என்று எண்ணினர்.

கெஞ்சும் பாவனையாக அவர்களைப்பார்த்தார் லக்ஷிமிபதி. அவர்கள் யாவரும் உள்ளதைக்கூற சஞ்சலப்பட்டனர்.

ஒரு டாக்டர் லக்ஷிமிபதியின் ஆப்த நண்பர். இந்த முக்கியமான செய்தியை தெரிவிக்க முடியாமல் தவித்தார். இதை அவருக்கு கூறவும் வேண்டும். கூறினால் எந்த நிலையில் முடியுமோ? சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல் தவித்துக்கொண்டிருந்தார்.

## பாபத்திற்கு தண்டனையா?

லக்ஷிமிபதி தள்ளாடித் தள்ளாடி எழுந்து அவாருகில் வந்தார். "என்ன முழிக்கிறீர்கள் டாக்டர்? என்று கேட்டார்.

டாக்டர் சிறிது நேரம் மௌனம் சாதித்தார். பிறகு ஏதோ எண்ணித் தேறுதலடைந்து லக்ஷிமிபதியைத் தனியாக அழைத்து மெதுவாக ஒரே ஒரு வார்த்தை தான் சொன்னார்.

'ஆ' என்றலறினர் லக்ஷிமிபதி. அந்த ஒரே வார்த்தையே அவருடைய சாகா உயிரில் பாதியை உரிஞ்சிவிட்டது.

"நிஜமாகவா டாக்டர்?" என்று பதட்டத்துடன் கேட்டார்.

"சந்தேகமில்லை லக்ஷிமிபதி"

"மறைக்க வழியில்லையா?" என்றார் கெஞ்சும் குரலில். அதற்கும் தலையை அசைத்துவிட்டார் டாக்டர்.

ஆக்ரோஷமாக, அக்கினி பொழியும் கண்களுடன், முகம் சிவக்க, ஆத்திரத்துடன் ஓடிவந்தார் கல்யாணியை நோக்கி.

"கள்ளி! என் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு எவனுடன் வேசித்தனம் செய்தாய். என் பேரையும் என் புகழையும் மண்ணோடு மண்ணாக்க யமன்போல வந்தாயே. போ. எங்காவது தொலை. இத்தனை நாள் எவனுடன் ஆனந்தமாய் இருந்தாயோ அவனுடனேயே போ." என்று படபடப்புடன் கூறிக்கொண்டே போனார். இன்னும் கொஞ்ச நாழிசென்றால் அவள் கழுத்தைக்கூடத் திருகிக் கொன்றிருப்பார்.

லக்ஷிமிபதியை சமாதானப்படுத்தி அப்புறப்படுத்திச் சென்றார் அந்த டாக்டர். ஹிதமான மொழிகளால் அவர் மனதிற்கு சாந்தியூட்ட முயற்சித்தார் அவர்.

'நான் கற்பமுற்று இருக்கிறேனா?' என்றாள் கல்யாணி பெருமூச்சு விட்டுக்கொண்டே. அவளைச்சுற்றி புயல்காற்று பலமாக வீசியது. அவளது மனம் பூமியைவிட அதிவேகமாகச் சுழன்றது. பைத்தியக்காரிபோல் சிரிக்கிறாள்; அழுகிறாள்.

படுக்கையைவிட்டு எழுந்தாள். அப்பாவுடைய கைத்துப்பாக்கியை எடுத்துக்கொண்டாள். வேகமாக நடந்தாள்.

அவளது விரித்த தலை; சிவந்த கண்கள்; கலைந்துபோன ஆடை; வெறிபிடித்த முகம்; கையில்யமன். கொடூர துர்க்கை போல காக்ஷியளித்தாள் அவள்.

ஐயோ பாவம்! வாழ்க்கையின் முடிவான சாயையும், பாபத்தின் தண்டனையான மரணத்தையும் கையாளத்தீர் மானித்துவிட்டாளா என்ன?

வேகமாக ஒடியவள் அடுத்த வீட்டிற்குள் நுழைந்தாள். இவள் வரும் அலங்கோலத்தைக் கண்டதும் நடு நடுங்கினுள் அந்த வீட்டுக்காரி.

''எங்கே அவன்?'' என்று கேட்டாள் ஆவேசம் கொண் டவள்போல். நடு நடுங்கிப் போய் கேட்டாள் அந்த எஜமானி, 'யாரென்று?'

"சுந்தரேசன்!"

சுந்தரேசன் என்றுகேட்டதும் அப்பெண் பயப்பட் டாள். எதற்காக இப்படித் தேடுகிருள் என்று பயம் கொண் டாள். "அவர் இல்லையே அம்மா" என்ருள்.

அவள் சொல்வதையும் கேட்காமல் அவளையும் தாண்டிக் கொண்டு மாடிக்கு ஓடினுல் கல்யாணி. இவளது அலங்கோ லத்தைக் கண்டு கலங்கினுன் அங்கிருந்த சுந்தரேசன்.

வேகமாகச்சென்றவள், "இப்பொழுது என்ன சொல்லு கிருய்?" என்ருள் கோபமாக.

"எதற்கு என்ன சொல்லவேண்டும்?"

"நான் கற்பமுற்றிருக்கிறேனும்"

"அதற்காக............

"நீதானே என்னைக் கெடுத்தாய் இப்பொழுது என்னைக் கல்யாணம் செய்துகொள். அபவாதம் நீங்கட்டும்"

"அதெப்படி முடியும்?"

"முடியாதா? நிச்சயம்தானா?"

"முடியாதுதான்"

"இந்த நிலையில் உன்னைத்தவிர வேறுயார் மணம்செய்து கொள்வார்கள்?

"கண்டிப்பாய் சாத்தியமாகாத காரியம்.......

"முடியாதா? சரி. இந்தா துப்பாக்கி. நீயே கொன்று விடு என்னை" என்று துப்பாக்கியை அவன் கையில் கொடுத்தாள் கல்யாணி.

"நான் ஏன் உன்னைக் கொல்லுகிறேன் சாவதற்கு இஷ்டமிருந்தால் குளத்திலாவது, கிணற்றிலாவது விழுந்து சாகிறதுதானே" என்றான் துடுக்காக.

கல்யாணியின் மனம் மிகவும் புண்பட்டது. "நான் சாவதற்குப் பதில் நீ தொலைந்தாலாவது என்னைப்போல ஆபத்தில் சிக்காமல் மற்ற பெண்களாவது தப்புவார்கள்" என்று கூறிக் கொண்டே அவன் கையிலிருந்த துப்பாக்கியைப் பிடுங்கி அவனுக்குக் குறிவைத்தாள்.

## புயலடித்தது.

லக்ஷ்மிபதி அந்த சமயத்தில் கல்யாணியைத் தேடிக் கொண்டு அங்கு வந்துவிட்டார். சரியான சமயத்தில் கல் யாணி கையிலிருந்த துப்பாக்கியைத் தட்டிவிட்டு, ஒரு ஆத்மா தூக்கு மரத்தில் ஏறுவதைத் தடுத்தார்.

கவலையால் பேசவும் ஜீவனற்றுப் போய்விட்டார் அவர். மானம் போனபின் இனி இருப்பதில் பயனில்லை என்று தீர் மானித்துவிட்டார். பைத்தியக்காரிபோன்று வீடுமுழுவதும் சுற்றிக்கொண்டிருந்தாள் கல்யாணியும்.

உதவிக்கு ஒருவரும் இல்லை. ஊரிலிருந்து கல்யாணியின் தாய் மாமன் சிவராமய்யரை வரவழைத்தார் லக்ஷ்மிபதி. அவரிடம் முழு விபரத்தையும் தெரிவித்துவிட்டார். கல்யா ணியை அந்தப் படுகுழியினின்றும் காப்பாற்றும் கடமையை அவன் தலையில் ஏற்றினர்.

"சிவராமா! நீதான் கல்யாணிக்குப் பொருப்பு. இந்த நிலையிலே அவளுக்கு ஒரு விமோசனம் கொடுக்கவேண்டும். 60 வயது கிழவனுக இருந்தாலும் பாதகமில்லை எப்படியாவது கல்யாணம் செய்துகொடுத்துவிடு. அவள் மறுக்கத்தான் செய் வாள். அதற்காகத் தயங்காதே. கட்டாயப்படுத்தித் தாலி கட்டி வைத்துவிடு. பின் பிராப்தம். ஆனல் அவளை தற்கொலை செய்துகொள்ள மட்டும் விட்டுவிடாதே" என்று கூறினர்.

பொறுப்பையெல்லாம் அவரிடம் ஒப்புவிப்பதைப் பார்த்தால் லக்ஷ்மிபதியின் உயிர் அதிகநேரம் தங்காதுபோலும் என்று எண்ணினர் சிவராமய்யர்.

திடீரென பெரும் புரட்சி. கார்மேகங்கள் ஒன்றுக்கொன்று மோதியது. பயங்கர சப்தம் பூமியை கிடு கிடுக்க வைத்தது. 'ஹோ' என்ற சப்தத்துடன் புயல் வீசிக்கொண்டிருந்தது. கல்மாறி பொழிவதுபோன்று மழை கொட்டுகிறது. அந்த நேரத் தோற்றத்தைப் பார்க்கும்பொழுது எதோ ஒரு பெரிய பிரளயம் அந்த வட்டாரத்தில் நடந்தே தீரும் என்று முன்னதாகவே எச்சரிப்பதுபோல் இருந்தது.

அடுத்த நாள். பொழுது புலர்ந்தது. கல்யாணி கண் விழித்தாள். படுக்கையில் பிதாவைக்காணவில்லை. 'அப்பா. அப்பா!' என்று இரு முறை அழைத்தாள் பதிலில்லை.

சிவராமய்யரும், கல்யாணியும் வீடு முழுவதும் தேடினார்கள். சமையலறைக்கு வந்ததும் திடுக்கிட்டாள் கல்யாணி.

பாவம்! ஒரு சாண் கயிறு லக்ஷ்மிபதியையும், உத்திரக் கட்டையையும் சம்பந்தப்படுத்திக்கொண்டிருந்தது.

கதறியழுதாள் கல்யாணி. உயிரோடுஇருக்கும் வரையில் அவரைப் பம்பரமாகத்தான் ஆட்டிவைத்தாள். அப்படிப் பட்டவள் இப்பொழுது புறண்டு அழுதால், அவளை சாகஸக்காரி என்று சொல்வதைத்தவிர இவளுக்காக யார் இரக்கப் படப்போகிறார்கள்.

வெளியில் தெரிந்தால் அவமானம், போலீஸ் உபத்திரவம். இதற்காகப் பயந்து காசரோகம் முற்றிப்போய் இறந்து விட்டதாக ஊராரிடமெல்லாம் கூறிவிட்டார் சிவருமய்யர்.

லக்ஷ்மிபதியின் கர்மக்கிரியை எல்லாம் முடிந்துவிட்டது. கல்யாணியின் நிலைமையும் மோசமாகிவிட்டது. தற்கொலை செய்துகொள்வதை பன்முறை தடுத்துப் பாதுகாத்துவந்தார் சிவருமய்யர்.

வீட்டில் கல்யாணத்திற்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் மும்மரமாக ஏற்பாடாகிக்கொண்டிருக்கிறது. கல்யாணம் தனக்கென்று கல்யாணிக்குக்கூடத் தெரியாது. முகூர்த்தம் கூட நிச்சயித்துவிட்டது. ஆனால் மாப்பிள்ளை யார் என்பது சிவருமய்யரைத்தவிர வேறு ஒருவருக்கும் தெரியாது.

முகூர்த்த தினத்தன்று கல்யாணிக்கு அலங்காரமாக ஆடை அணிவித்து வைத்திருக்கிறார்கள். பொம்மைக்கு அலங்காரம் செய்து உட்கார்த்திவைத்ததுபோல் இருந்தது. அவளுக்கு அதில் விருப்பம் இருந்தால்தானே.

மனைக்கு இழுத்துக் கொண்டுவந்தார்கள். மூடிய கண்களைத் திறக்கக்கூடவில்லை. கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வடிய பேய் பிடித்தவள்போல் உட்கார்ந்திருந்தாள் கல்யாணி.

மேளகாரன் கெட்டிமேளம் வாசித்தான். கையில் ஒரு மாலையைக்கொடுத்து, பிள்ளை கழுத்தில் அணியச்சொன்னார்கள் கல்யாணியிடம். கல்யாணி கண் திறந்து பார்த்தாள்.

அழுது பொருமிக்கொண்டு மறுத்துவிட்டாள். மாலையைக் கீழே நழுவவிட்டாள்.

பிள்ளைக்கு வயது 60 தான். அதிகமில்லை! ஒட்டிய கன்னம், குழிந்த கண்கள். மணையில் நிற்கக்கூடத்திடனின்றி தள்ளாடித்தடுமாறுகிறுர்.

கெட்டிமேளத்தை பலமாகக் கொட்டும்படி ஆக்ஞாபித்தார் சிவருமய்யர். கல்யாணியின் கையில் மாலையைத்தினித்து அவள் கையைப் பிடித்து, மணப்பிள்ளை கழுத்தில் மாலையை அணிவித்துவிட்டார் சிவருமய்யர். கல்யாண மணையில் மாண துக்கம்.

## ருசிகண்ட பூனை.

---

எது எப்படிப் போனல் என்ன? கல்யாணி கழுத்திலும் ஓர் நூல் கயிறு விழுந்துவிட்டது. உலகத்தில் அவளுக்குக் கிடைக்கவிருக்கும் அபவாதமும் நீங்கிவிட்டது. இப்பொழுது உலகம் என்ன சொல்லும். கல்யாணிக்கு என்னடி குறைவு. கவலையெல்லாம் தீர்ப்பதற்கு ராஜாவாட்டமா பிள்ளை பிறந்துவிடுவான் என்றுதானே. உண்மை அவர்களுக்கு என்ன தெரியப்போகிறது.

கல்யாணம் ஆன மறுதினமே கல்யாணி புக்ககம் சென்றுவிட்டடாள். அழுத கண்ணும், சிந்திய மூக்குமாகவே வாசல்படியிலும் காலே வைத்தாள் புண்ணியவதி.

பெயருக்குத்தான் புருஷன் மனைவியென்று. வீட்டுக் காரியங்களைக் கவனிக்க சமையல்காரி ஒருவள் இருக்கிறாள். கல்யாணி செய்வதற்கு ஒரு காரியமும் கிடையாது. படுக்கை யறையில் ஒரு மூலையில் படுத்துக் கிடப்பாள் கல்யாணி.

பாவம்! அந்தக் கிழவனும் வாய்திறக்கமாட்டார். ஒரு நீண்டபெருமூச்சுடன் சரி. அவளுக்கு ஒருவிதக் கஷ்டமும் கொடுக்கக் கூடாது என்பதே அவாது அவா.

கல்யாணி புக்ககம் வந்ததிலிருந்து ஏதோ ஒரு வருத்தம் அவள் மனதில் உழன்றுகொண்டிருந்தது. உலகத்தில் தனக்கு யாருமே ஆதரவில்லை யென்ற ஏக்கம் மிகப்பீடித்திருந்தது. அடிக்கடி சுந்தரேசன் குழல் வாசிக்கும் இனிமை அவள் செவியுட் புகுந்து மயக்கத்தைக் கொடுக்கும். சுந்தரேசனைப் பார்க்கவேண்டுமென்று ஆவல் உண்டாகும். அடுத்த நிமிடம் அவன் செய்த துரோகத்தை யெண்ணி அவனை வெறுப்பாள்.

படுக்கையறை மாடத்தில் ஜன்னலில் உட்கார்ந்திருக்கிறாள் கல்யாணி. அவள் மனது மிகவும் குழம்பியிருக்கிறது. அவள் மனம் அமைதியை நாடியது. புஸ்தகமாவது வாசிக்கலாமென்று எழுந்தாள். எழுந்துபோகையில் பின்னலிருந்து தன் புடவையைப் பிடித்து இழுப்பதுபோலிருந்தது. திடுக்கிட்டுத் திரும்பினாள் கல்யாணி.

"யாரு? சுந்தரேசனா!" என்றாள் அவள்.

அன்னியனுக்குச் சொந்தமான ஒருவளை புடவையைப் பிடித்து இழுப்பதென்றால் அவனுக்கு எவ்வளவு துணிச்சலிருக்கவேண்டும்.

கொஞ்சநேரம் ஆனந்தத்தால் அவனையே பார்த்துக் கொண்டிருந்த கல்யாணியின் முகம் மாறுபட ஆரம்பித்தது.

"இந்த ஊருக்கு என் வந்தாய்?" என்றாள். அவள் குரல் சற்று கடிமையாகவே யிருந்தது.

"கல்யாணி! கடுமையாகப் பேசாதே. நான் செய்த பாபத்தை இப்பொழுதுதான் அறிகிறேன். என்னை மன்னிக்க மாட்டாயா?"

"நான் எதற்காக உன்னை மன்னிக்கவேண்டும். தயவு செய்து கேட்டுக்கொள்ளுகிறேன். இந்த இடத்தை விட்டுப் போய்விடு" என்று கெஞ்சிக்கேட்டாள் கல்யாணி.

"கல்யாணி, நான் செய்த பிழையை மன்னித்துக்கொள். நான் இப்பொழுது உன்னை மணஞ்செய்து கொள்ளத் தயார். உன்னை நினைத்தே என் மனைவியைக்கூட ஒதுக்கிவைத்து விட்டேனே என்னைப்பார்" என்று கெஞ்சினான் சுந்தரேசன்.

அப்பொழுதுகூட கல்யாணி போதையில் ஆழ்ந்து கிடந்தாள்.

ஜன்னலின் வழியாகக் கைவிட்டு, கல்யாணியின் காங்களைப் பற்றிக்கொண்டு "கல்யாணி நீ இப்படியெல்லாம் பேசுவாய் என்று நான் எதிர்பார்க்கவேயில்லை. அந்தப் பழைய இன்ப தினங்கள் திரும்ப வருமா? நீ எனக்கே வாழ்க்கைப் படுவாய் என்று எண்ணியிருந்தேன். ஆனால், விதி யாரைத் தான்விட்டது" என்றான்.

கல்யாணியின் கை அவனுடைய காத்திலேயே கிடந்தது. அவளும் அதை மீட்க முயற்சிக்கவில்லை. அவன் சொல்வதையெல்லாம் மௌனமாய் கேட்டுக்கொண்டிருந்தாள். அந்தப் பழய இன்ப தினங்கள் அன்றுகூட ஒருநாள் தான் என்று கனவு கண்டு கொண்டிருந்தாள்.

நதியின் பிரசண்ட வேகத்தில் கரையிலுள்ள நாணற்புதர் நடுங்குவதுபோல், கல்யாணியின் தேகம் நடுங்கியது. சுந்தரேசனின் இரு கைகளும் தீண்டுவதானது காந்தக்கம்பி தீண்டுவதாகப் பிரேமைகொண்டு உணர்விழந்தாள். அவள் நின்றுகொண்டு பேசிக்கொண்டிருந்த இடம் திறந்த வெளியாக மட்டிலும் இருக்கும் பக்ஷத்தில் அவளை அவன் இழுத்துக்கொண்டு போயிருந்தால் கூட கல்யாணி வாய்திறவாமல் அவனுடன் சென்றிருப்பாள். அவளது புத்தி அப்படிக் கலங்கியிருந்தது. எவ்வளவு நேரம் அவர்கள் இருவரும் அந்த நிலையில் இருந்தார்களோ தெரியாது.

## பாலன் பிறந்தான் ஆவி பிரிந்தது.

---

அந்தக்கிழவன்—கல்யாணியின் கணவனைத்தான் குறிப்பிடுகிறேன். காலையில் ஆகாரம் செய்தபின் வயல் வரப்பிற்கு சென்றுவிடுவான். திரும்பி வருவது இரவு எட்டு மணிக்குத்தான் இடைவேளையில் அந்த பாபிகள் இருவரும் பழைய நட்பை புத்துயிர்பெற்று திருட்டுத்தனமாக ஆரம்பித்துவிட்டார்கள்.

அவளும், அந்தப் புனிதமான கிழவர் வீட்டிலே பாப மூட்டைகளைச் சுமந்துகொண்டு நாட்களைக் கழித்துவருகிருள். இந்தக் கல்யாணியைப் போன்றவர்கள் மனம் எதால்தான் செய்யப்பட்டிருக்குமோ !

பெண்களுக்குரிய கடமையை ஒரு நாளாவது அவள் அந்தக்கிழவருக்குச் செய்தது கிடையாது. அப்படியிருந்தும் ஒரு நாளாவது அவர் கடிந்து ஒரு சொல் அவளைச் சொல்லி யது கிடையாது.

ஒரு நாள் காலை. கல்யாணியின் கணவன் வயலில் உட் கார்ந்திருக்கிருர். அவருடைய வேலைக்காரன் ஒருவன் அதி வேகமாக ஓடி வந்தான்.

அவன் கையில் வெற்றிலைத்தட்டு வைத்திருந்தான். "என்ன சமாசாரம் மூக்கா?" என்று விசாரித்தார் அவர்.

"எங்களுக்கு சின்ன எசமான் பொறந்திருக்காருங்க" என்று கூறிக்கொண்டே கையிலிருந்த வெற்றிலைத்தட்டை அவர் கையில் கொடுத்தான்.

விஷயம் வேறு ஒன்றுமில்லை. அவர் வயலுக்குச்சென் றிருந்த சமயம் கல்யாணி பிரசவித்திருக்கிருள். இந்த சந் தோஷ சமாசாரத்தைத் தெரிவிக்கவே ஓடிவந்தான் மூக்கன்.

கிழவருக்கு சந்தோஷத்திற்கு சொல்லிமுடியாது. அணை யப்போகும் சுடரைத் தூண்டிவிடப் பிறந்திருக்கிருன் ஒரு பாலன்.

அவர் வாழ்ந்த இந்த அறுபது வயதிற்குள்ளே இன்று ஒரு நாள் தான் அந்த ஜீவனற்ற ஆத்மா – கிழவர் – பல்லிழந்த வாயைக் காட்டி சிரித்திருக்கிறது.

மனம் போலவே மாங்கல்யம். அந்த வஞ்சகப் புழுக் களுக்கு இடையூறாக அந்தக் கிழம் இருப்பது அவர்களுக்கு சகிக்கவே இல்லை.

அந்தக் கவலையும் தீர்ந்துவிட்டது அன்றுடன். வயலுக் குச்சென்றிருந்த கிழவர் திரும்பிவந்தார். வரும்பொழுதே தலைவலியுடன் வந்து படுக்கையில் சாய்ந்தவர்தான். பாசக் கயிரை வயலிலேயே அவர் மீது வீசிவிட்டான் போலும் யமன்.

தலைவலியால் இவ்வளவு துடிதுடிக்கிறார் கிழவர். என்ன செய்கிறது என்று கேட்கவேண்டுமே அந்தக் கள்ளி. நெடு மரம் போன்ற கவலையற்று உட்கார்ந்திருக்கிறாள் ஒரு மூலையில்.

பேசக்கூட முடியவில்லை. கல்யாணியை அழைத்தார். இது தான் முதன் முதலாக அவளை அழைத்தது. இதுவே தான் கடைசி அழைப்பாகவும் முடிந்தது.

முகத்தை ஆயிரம் கோணலாக வைத்துக்கொண்டு, எதிரே வந்தாள் கல்யாணி. "ஏன் அம்மா முகத்தைச்சுழிக் கிறாய். என் மனம் குளிர இந்த ஒரு நிமிடமாவது என்னி டம் உன் கடமையைச் செய்யக் கூடாதா?" என்றார்.

சாணையுள்ளவளாக இருந்தால் அந்த வார்த்தையின் கருத்து தாங்காது உயிர்விட்டிருக்கமாட்டாளா!

'குழந்தையை இப்படிக்கொடு' என்றார் கிழவர். உச்சி குளிர முத்தமிட்டார் அதை. குழந்தையைப் பிரியமனமில்லாது கதறினர். தன் பெயரையே குழந்தைக்கு பெயரிடும்படி கல்யாணியைக் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்.

"பாலசந்திரா! புகழுடன் விளங்கு" என்று கூறிக் கொண்டே கண்களை மூடினர் கிழவர். அந்தச் சமயத்தில் விளையாடிக் கொண்டிருந்த அந்தக் குழந்தைகூட அழுதது. அந்த சூன்யக்காரி நின்றுகொண்டிருக்கிருள். அந்த பாபாத்மாவின் திருஷ்டி தன்மீது பட்டுவிடுமோ என்று பயந்து சூரியன் கூட ஓடி ஒளிந்துகொண்டான்.

---

## மாமா வந்தார்

இனி கல்யாணிக்கும், சுந்தரேசனுக்கும் கவலையேயில்லை. பிறந்த இடத்திலும் செல்வம். புகுந்த இடத்திலும் செல்வம் இனி செல்வத்திலேயே மிதக்கலாம்; செல்வத்திலேயே ஆடலாம். இடையூராக இருந்த கட்டையை மண் தின்றுவிட்டதல்லவா.

கிழவர் இறந்து இரண்டு நாளாகவில்லை. தென்றல் காற்று ஜிலுஜிலுவென்று வீசும் அந்த மாலை வேளையில், மூன்ருவது மாடியில் சுந்தரேசன் காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்து

கொண்டிருக்கிறான். அவன் மடியில் தலை வைத்து கல்யாணி படுத்துக்கொண்டு விளையாடுகிறாள்.

வாசலில் அதே சமயம் ஒரு வண்டிவந்து நின்றது. கல்யாணியின் மாமன் சிவராமய்யர் கிழவருடைய மரணத்துக்கு துக்கம் விசாரிக்க வந்திருக்கிறார். அவர்கள் வந்ததுகூடத் தெரியாமல் ஆனந்த வெள்ளத்தில் மூழ்கிக்கிடக்கிறாள்.

'கல்யாணி' என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் சிவராமய்யர். வீடு முழுவதும் தேடிவிட்டு மாடிக்கு வந்தார்.

மேல் மாடியில் காலை வைத்ததும் திடுக்கிட்டார். சுந்தரேசன் மடியில் படுத்துக்கொண்டு பாடிக்கொண்டிருந்தாள் கல்யாணி. இதைப்பார்க்க அவருக்கு சகிக்கவில்லை. வேகமாய் கீழே இறங்கத் துடங்கினார்.

மாடிப்படியோசைகேட்டதும் வாரிச்சுருட்டிக்கொண்டு எழுந்தாள் கல்யாணி. படியில் வந்து எட்டிப் பார்த்தாள். மாமா இறங்கிக்கொண்டிருந்தார்.

பின்தொடர்ந்து ஓடிவந்தாள் கல்யாணி. 'மாமா மாமா' என்று அழைத்துக்கொண்டே.

அவர் திரும்பிக்கூட பார்க்காமல் வாசலுக்கு வந்து வண்டியிலேறிவிட்டார்

"ஏன் மாமா திரும்பிப் போறேள்?" என்று கேட்டாள் கல்யாணி. வண்டியைப் பிடித்துக்கொண்டே

வேறுபுறம் திரும்பிக்கொண்டு வண்டிக்காரனுக்கு சைகைசெய்தார். வண்டிவேகமாகப் புறப்பட்டது.

கல்யாணி திக்பிரமைகொண்டு அங்கேயே நின்று விட்டாள்.

சுந்தரேசன்தான் தேறுதல்கூற இருக்கிறனே. "ஏன் கல்யாணி! நம் வாழ்க்கையைப் பாழ்ப்படுத்திய அவர்கள் உறவு நமக்கு எதற்கு? அவர் திருப்பிப்போகிறர் என்று கவலைப்படுகிறயே. போனல்போகட்டும். இனிநமக்கு இவர்கள் தாக்ஷண்யம் எதற்கு? என்று சொல்லி கல்யாணியை உள்ளே அழைத்துச் சென்றன்.

---

## ஓஹோ பாட்டு வாத்தியாரா?

அந்த ஊரில் இருந்தால்தானே தொந்தரவு. ஊரார் வம்பளப்பார்கள் என்ற பயம். நிலபுலன்களை விற்ருள். எல்லாவற்றையும் வாரிசுருட்டிக்கொண்டு சென்னைக்கு வந்துவிட்டாள் கல்யாணி. அங்கு யார் இவர்களைப்பற்றி சந்தேகிக்கப் போகிறர்கள்.

பணம் அளவுக்கு மீறியிருந்தால் புதிதுபுதிதாக ஆரம்பிக்கவேண்டியதுதானே. இதுவரையிலும் இல்லாத குடியையும் கற்றுக்கொண்டுவிட்டார்கள் அவர்கள்.

என்ன ரசாபாசமான செய்கைகள்! தெருவில் குடித்துவிட்டுப் பிரளுவதும், கத்துதலும், கூப்பாடு போடுதலும்.

போதாதற்கு புதிதான ஏற்பாடும் செய்துவிட்டான் சுந்தரேசன். கல்யாணிக்கு நடனமும் நடிப்புங்கூட கற்றுக் கொடுத்துவிட்டான்.

'பப்ளிக் ஹாலி'ல் அருமையான கச்சேரிக்கும் ஆர்டர் வாங்கிவிட்டான். கல்யாணியின் நாட்டியம். சுந்தரேசன் கோஷ்டியின் பக்கவாத்தியம்.

கச்சேரி மிகவும் நன்ருக இருந்தது. அந்த முதல் கச்சேரியே அவளுக்குப்பெரும் புகழையும் அள்ளிக்கொடுத்தது.

வீட்டில் மட்டிலும்தான் அவளுக்குக் கல்யாணி என்று பெயர். வெளியிடங்களிலெல்லாம் அவள் பெயர் மேனகா.

சில நாட்கள் நடனக் கச்சேரி; சில நாட்கள் நாடகத்திலும் நடிப்பாள் கல்யாணி.

நாடகமும் முடியவேண்டியதுதான் கல்யாணியும் சுய உணர்வை இழந்து விடுவாள் குடிமயக்கம் தலைக்கேறிவிடும்.

எது எப்படிப் போனல் என்ன? இந்தசூழல்களெல்லாம் நாடக உலகில் சாதாரணம் தானே. கல்யாணி பிரபல நடனக்காரி என்று பெயர் வாங்கிவிட்டாள். அவள் ஒரு பெரிய நாடகமேடைத்திலகம் என்ற கியாதியையும் அடைந்து விட்டாள்.

பணம் பணத்துடன் சேர்ந்தது. பாலசந்திரனுக்கும் வயது பத்து ஆகிவிட்டது. அவன் ஐந்து வயதாக இருக்கும் பொழுது அப்பா யாரம்மா என்று கேட்டிருக்கிருன்.

'அவர் செத்துப்போய்விட்டார்' என்று கல்யாணியே பதில் சொல்லியிருக்கிருள்.

அவனுக்கு எட்டு வயதாகும்பொழுது கொஞ்சம் கண் திறந்துதான் விளங்கினன். அப்பொழுது 'நம்ப ஆத்திலே ஒரு மாமா இருக்கிருரே அவர் யார்?' என்று கேட்டிருக்கிருன்.

'அதுவா? எனக்குப் பாட்டுச்சொல்லிக்கொடுக்கும் வாத்தியார், என்று கூறியிருக்கிருள்.

வயது இப்பொழுது பனிரண்டு. அவன் கேட்டான் மறுபடியும் 'அது யார் என்று?'

'அவர்தான் உனக்கு வீட்டு வாத்தியார்' என்று சமயோஜிதம்போல கூறியிருக்கிருள்.

பாலசந்திரன் இதையெல்லாம் கண்டானு என்ன? சிறு குழந்தைகளுக்கு பகவான் களங்கமற்ற ஹிருதயமல்லவா கொடுத்திருக்கிருன்.

நாளுக்கு நாள் படிப்பில் கெட்டிக்காரனுகி வருகிருன். ஒவ்வொரு வருடமும் வகுப்பில் முதல் பையன் அவன்.

அவனை வளர்த்தெடுப்பதெல்லாம் ஒரு தாதிதான். ஒரு நாளைக்கு ஒருதரம் அவன் தன் தாயைப் பார்த்தால் அபூர்வம்.

இப்பொழுது பாலசந்திரனுக்கு உலகவஞ்சகம் நன்றாகத் தெரிந்துவிட்டது. வயது இருபது ஆகியுமா தெரியாமல் இருக்கும். உலகத்தின் மாய்கைச் செய்கைகள் அறைகுறையாய்க் கேட்டிருக்கிறான். நாடகமேடை ஊழல்களைப்பற்றி பலபேர் பலவிதமாகக் கூறுவதைக் கேட்டிருக்கிறான்.

தன் தாயும் ஒரு நாடகக்காரியென்று தெரிந்ததுதானே. தன் தாயாரை யணுகினான். இனி நாடகமேடைக்குச்செல்ல வேண்டாமென்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். என்ன காரணமெல்லாமோ சொல்லி அவனைச் சமாதானப்படுத்திவிட்டாள் கல்யாணி.

என்னதான் இருந்தாலும் தாயாரின் நடத்தை அவனுக்குப் பிடிக்கவில்லை. வீணாகத் தாயைச் சந்தேகிப்பதும் பாபமாகும். கவலையென்பதையே அறியாத அவன் நெஞ்சம் இதைத் தாங்கமாட்டாமல் தவித்தது.

பாலசந்திரன் பள்ளிக்கூடம் போயிருக்கிறான். இனி சாயங்காலம்தான் திரும்புவான். கவலைபற்று ஆனந்தமாக இருக்கிறது இரு ஆத்மாக்கள்.

தலைவலி பொறுக்கமுடியவில்லை. பாடத்திலும் கவனம் செல்லவில்லை. லீவு எடுத்துக்கொண்டு வீடு திரும்பினான் பாலசந்திரன். வீட்டிற்குள் சென்று தேடினான் பாலசந்திரன். அம்மாவைக் காணவில்லை. ஆனால் குழலின் இனிமையான ஒலியும், சதங்கைச் சப்தமும் அவன் காதில் விழுந்தது.

மாடிக்குச்சென்றான் பாலசந்திரன். சுந்தரேசன் புல்லாங்குழல் வாசித்துக்கொண்டிருக்கிறான். கல்யாணி நடனம் ஆடிக்கொண்டிருக்கிறாள்.

கொஞ்சநேரம் அங்கேயே நின்றுகொண்டு கவனித்துக்கொண்டிருந்தான். நடனம் முடிந்தது. அந்த சந்தோஷத்தில் சுந்தரேசனைக் கட்டித் தழுவி முத்தமிட்டாள் கல்யாணி.

பாலசந்திரனின் நெஞ்சம் துடிதுடித்தது. 'அம்மா' என்றான் நடுங்கும் குரலில்.

---

## வாழ்வா பெரிது

தன் புதல்வனின் குரல் கேட்டு பதறி எழுந்தாள் கல்யாணி. கண்களில் அனல் பொறி பறக்க நின்றுகொண்டிருந்தான் பாலசந்திரன்.

அந்த ஒரு நிமிடத்திற்குள் அவன் மனம் படாதபாடு பட்டது. 'ஐயோ! நான் தாசிக்குப் பிறந்தவனா?' என்று கதறியழுதான்.

ஆத்திரத்துடன் புஸ்தகத்தை வீசியெறிந்தான். தான் அணிந்திருந்த உயர்ந்த ஆடைகளையெல்லாம் கழற்றியெறிந்தான். இடுப்பில் ஒரே வேஷ்டியுடன் வெகு வேகமாகச் சென்றுவிட்டான்.

பின்னாலேயே ஓடினாள் கல்யாணி. அவன் அவள் கண்களுக்குத் தட்டுப்பட்டால்தானே.

போனவன் போனவன்தான். திரும்பிவரவேயில்லை. கல்யாணியின் வயிற்றில் ஒருகரம் சுழற்சி ஏற்பட்டது. அந்தப் புரட்சியில் மூளையும் பிழறியது. கல்யாணிக்கு புத்திரசோகத்தால் பைத்தியமாகிவிட்டாள்.

அவள் கண்டபடி புலம்புகிறாள். அடிக்கடி சுந்தரேசனை திட்டுகிறாள். புத்திரபாசத்தால் தவிக்கிறாள்.

அவள் கண்முன் அடிக்கடி தோன்றுகிறது அந்தக் காக்ஷி. பால்வழியும் அந்த முகத்தில் க்ஷணநேரத்தில் ஒரு மாறுதல். நீர் வழியும் விழிகள். சகிக்கமுடியாத துக்ககரமான முகம். பாலசந்திரன் அந்த ரூபத்தில் பிரசன்னமாகிறான் அவள்முன்.

உண்மையான பாலசந்திரன் என்று எண்ணி அவனைப் பிடிக்கப்போகிறாள். தூணில் முட்டிக்கொள்ளுகிறாள். எவ்வளவோதரம் மாடியிலிருந்து கீழே உருண்டிருக்கிறாள்!

அவன் போய்விட்டான் அந்த எல்லையை விட்டே நூறு மைல் தூரம் நடந்து சென்றிருக்கிறான்.

பாலசந்திரன் பழைய சம்பவத்தை நினைத்து நினைத்து அடிக்கடி கலங்கி நிற்பான். அந்தச்சமயத்தில் அவன் நெஞ்சம் பொருமி விம்மும். கண்கள் நீரைக்கொண்டு வந்து வெளியேகொட்டும். அந்த துக்கத்தில் சாப்பிடக்கூட மறந்து மயங்கிக் கிடப்பான்.

இன்பமாகக் காலத்தைக் கழிக்கவேண்டிய பருவத்தில் ஒருவேளைச் சோற்றுக்காக கோடரி பிடித்து தகிக்கும் வெயிலில், பட்டினியுடன் விறகுவெட்டும் அந்தக் கண்கொள்ளாக் காக்ஷியை மானிடப் பிறவியாயிருந்தால் கண்கொண்டு சகியாது.

அவன் காலம் அப்படி மாறிவிட்டது. வயறு ஒன்றையே பிரதானமாகக் கருதி மானத்தைக் காற்றில் பறக்கவிட்டு ஜீவிப்பதை அவன் கொஞ்சமும் விரும்பவில்லை. அந்தப் பாபமான செய்கையைக் கண்டபின் உயர்குலத்தில் பிறந்த குழந்தை அவள் கையினல் உணவு அருந்த எப்படி மனம் கொள்ளும்.

அப்பொழுதெல்லாம் அவனுக்குப் பல எண்ணங்கள் தோன்றும். தன் தாயை முதலில் சித்திரவதை செய்ய வேண்டும். அவளைப்போன்ற கிராதகிகளை உலகத்தில் எவ்வளவுபேர் இருந்தாலும் உயிரோடு கொளுத்திவிட ஏன் கூடாது?

நாலு விறகு வெட்டுவான், கை அசந்துபோகும். உள்ளங்கையைப் பார்த்துக்கொள்வான். அந்த மிருதுவான கை கொப்பளித்துக் கிடக்கும்.

'ஆமாம் அந்தப் பாபியின் வயிற்றில் பிறந்ததற்கு இது மட்டிலும் போதுமா?' என்றெண்ணுவான்.

வேலை கிடைத்தால் சாப்பிடுவான் வேலை கிடைக்காவிட்டால் பட்டினிதான். இவ்வளவு சிறுவயதிற்குள் அவன் படாத கஷ்டம் கிடையாது.

அவன் செய்யாத வேலை கிடையாது. கைவண்டி தள்ளியிருக்கிறான். மூட்டை தூக்கியிருக்கிறான். கொல்லன் பட்டறையில் செம்மட்டி பிடித்து அடித்திருக்கிறான்!

ஒரே ஒரு சமயம்தான் வேலையே அகப்படாமல் மூன்று நாட்கள் பட்டினிகிடந்து இருக்கிறான். அந்தப் பசிக்கொடுமையானது ஒரு ஈனசெய்கையைச் செய்யும்படி அவனைத் தூண்டியது.

---

## நாரதரின் அவதாரம்.

ஒருநாளும் அவன் சம்மதித்திருக்கமாட்டான், அவன் சுய உணர்வுடன் இருந்திருப்பானேயானால் கையில் ஓடு எடுத்து பிச்சையெடுக்க ஆரம்பித்தது அதுதான் அவன் வாழ்விலேயே முதல் தடவை.

கடைத் தெருவில், நடுச் சந்தியில் கையில் ஓட்டை வைத்துக்கொண்டு பிச்சை எடுக்கிறான். அப்பொழுது ஒரு பாட்டு பாடினான். அதில்தான் என் அர்த்த புஷ்டி!

"அவள் பெற்றெடுத்த புதல்விகளெல்லாம், தாயின் வியாதியைப் பரப்புவதைவிட்டு மேலும் மேலும் அவளுக்கு அபகீர்த்தியையே வாங்கிச் சூட்டுகிறார்கள். அவள் புதல்விக

ளெல்லாம் செய்யும் பாப காரியங்களினுல் ஒவ்வொரு புத்திரி யின் அந்தராத்மாவும் ஒரு கொடிய புழுவாக மாறி தாயின் ஹிருதயத்தைப்போய் கவ்வுகிறது. அவள் கொடிய காச நோயால் கஷ்டப்படுகிருள். நெருப்பில் அகப்பட்ட புழுவாய் துடிக்கிருள். அவளை உங்களால் காப்பாற்ற முடியாதா.?"

இந்தப் பாட்டைப் பாடும்பொழுது அங்கு இருந்த கூட் டத்தில் ஒருவராவது அழாதவர்கள் கிடையாது. அவ்வளவு உணர்ச்சியுடன் பாடுகிருன் பாலசந்திரன்.

காரில் சென்று கொண்டிருந்த கனவான் ஒருவர் அதைக் கேட்க நின்ருர். அவரும் அதில் மயங்கி விட்டார்.

பாலசந்திரனை அழைத்தார் அவர். அவன் கையில் ஒரு விலாசச் சீட்டைக் கொடுத்து, நாளை தன்னைச் சந்திக்கும் படி கூறிச் சென்ருர்.

பாலசந்திரனுக்கு உச்சி குளிர்ந்தது. அந்த கனவானுல் தனக்கு எப்படிப்பட்ட உதவி கிடைக்கப் போகிறது என் பதைப்பற்றி கோட்டை கட்டினுன்.

அன்று இரவு முழுவதும் அவனுக்குத் தூக்கம் கிடை யாது. எப்பொழுது சூரியன் வான வெளியில் கிளம்பப் போகிருன் என்றே எதிர் பார்த்துக்கொண்டிருந்தான்.

பொழுது புலர்ந்தது. வான வெளியில், ஆனந்த ஜோதியை அள்ளிக்கொட்டி நடனமாடினுன் சூரியன். பால சந்திரனும் எழுந்தான். பாழ் வீடும் அவனுக்கு விடை யளித்தது.

அந்தக் கனவானின் வீட்டைக் கண்டு பிடித்தான். அந்த வீட்டில் தொங்கிக் கொண்டிருந்த பலகையிலிருந்து அவர் பெயர் கருணுகரர் என்று தெரியவந்தது.

உள்ளே நுழைந்தான். கை கூப்பி வணங்கினுன் அக் கனவானை. அன்புடன் வரவேற்ருர் அவரும்.

"நாடகத்தில் சேர உனக்கு இஷ்டமா?" என்று கேட்டார் கருணுகரர்.

பாலசந்திரன் சிறிது நேரம் தயங்கினுன். நாடகம் என்பது அவனுக்கு வெறுப்புத் தட்டிய ஒரு பொருள். பிரிய மில்லை என்று சொல்ல வாய் திறந்தான்.

"அதில் நீ கட்டாயம் புகழடைவாய்" என்ருர் அவர்.

பாலசந்திரனல் மறுத்துக் கூற முடியவில்லை. அவன் ஒப்புக் கொண்டான். அந்த விஷயத்தில் அவன் முதலாளிக்குப் பரம திருப்தி. உடனே அவனுக்கு நல்ல ஆடைகள் அளித்தார்.

அந்த நாடகக் கம்பெனியில் அவனது கியாதி விரைவாகப் பரவ ஆரம்பித்தது. அவனைப் பேட்டி காண அநேகர் வந்து போகின்றனர். அவனல் அந்தக் கம்பெனிக்கு நல்ல பெயர். கருணுகாருக்கும் நல்ல வருமானம். தன் சொந்த குழந்தை போல் வளர்த்து வந்தார் அவனை.

தன் கற்பன சக்தியைக் கொண்டே நாடகத்தில் பேசி நடிக்கிருன். கதையின் சாராம்சம் மட்டிலும் தான் அவனுக்குத் தெரிய வேண்டும்.

எந்த நாடகமாக இருந்தாலும் அதில் அவனுக்குத் தான் முக்கிய வேஷம். அதைச் சாதுர்யமாகவும் நடித்து முடிப்பான்.

அவன் புகழ் நாளுக்கு நாள் ஓங்கியது. அவனைப்பற்றியும், அவன் பிறப்பைப் பற்றியும் ஜனங்கள் பலவிதமாகப் பேசுகிறார்கள். அவன் சாக்ஷாத் நாரதரின் பூலோக அவதாரம் என்றுகூட சிலர் பேசிக் கொள்ளுகிறார்கள்.

அவன் அழுது கொண்டு நடித்தால் ஜனங்கள் எல்லோரும் அழுவார்கள். அவன் ஆனந்தக் கட்டத்திற்கு வரும்பொழுது ஆனந்த பாஷ்யம் பொழியும். நாடகம் முடிந்தால் கூட ஜனங்கள் எழுந்து செல்லமாட்டார்கள். பாலசந்திரனே கடைசியில் வந்து ஒரு தரம் நமஸ்கரித்து முடிந்து விட்டது என்று சொன்னால் தான் கூட்டம் கலையும்.

## அங்கும், இங்கும்.

---

நூறு மைல்களுக்கு இப்பால் பாலசந்திரனின்புகழ் ஓங்குகிறது. ஒரு புறம் மேனகாவின் (கல்யாணி) புகழ் காட்டுத் தீ போல் பரவுகிறது. இருவரையும் சேர்த்து ஒரே மேடையில் காண வேண்டுமென்பது பலபேருடைய ஆசை.

பாலசந்திரன் தன்னை விட்டுப் பிரிந்த பின் கல்யாணி நாடக மேடையிலேயே ஏறியது கிடையாது. தன் சுய நினைவுடன் இருந்தால் தானே நடிக்க முடியும்.

ஒவ்வோர் சமயம் ஒப்பந்தத்திலிருந்து விலக முடியாத நாடகத்திற்கு எப்படியாவது கல்யாணியை நாடகமேடைக்கு இழுத்துச் சென்றுவிடுவான் சுந்தரேசன்.

நாடகம் ஆரம்பிக்க வேண்டியது தான். கல்யாணிக்கு பாலசந்திரனின் நினைவு வந்து விடும். மேடையில் நுழைய மறுத்து வெளியே ஓடி விடுவாள். அந்த சமயத்தில் சுந்தரேசனும், கண்டிராக்டரும் தவியாய் தவிப்பார்கள்.

கல்யாணியைச் சமாதானப்படுத்தி நடுமேடைக்குத்தள்ளி விடுவார்கள். கொஞ்ச தூரம் கதை விருவிருவென்று செல்லும். பாலசந்திரனின் ஞாபகம் அவளுக்கு வராமல் இருக்கும் வரையில் நாடகம் ஜரூராக நடக்கும்.

பாலசந்திரனின் ஞாபகம் வந்து விட்டால் புத்திர சோகத்தால் புலம்ப ஆரம்பித்து விடுவாள். முடிவில் மூர்ச்சையடைந்து கீழே விழுந்து விடுவாள்.

திரை விழுந்த பிறகு கண்டிராக்டர் மேடையில் ஏறுவார். தன்னை மன்னிக்கும்படி ஜனங்களைக் கோருவார். கல்யாணிக்குச் சித்தப் பிரேமை என்றும் சமயம் வாய்த்தால் மறுதரம் நடத்துவதாகவும் கேட்டுக்கொள்வார்.

பாலசந்திரனுக்கும் தன் தாயாரைப் பற்றிய நினைவு வாராமல் இருக்காது. பெற்ற பாசம் கொஞ்ச நேரம் கதற வைக்கும். அவளது சண்டாளச் செய்கையை நினைவிற்கு கொண்டுவரும் பொழுது படாதபாடு படுவான்.

அந்தச் சம்பவத்திலிருந்து அவனுக்குப் பெண்களைக் கண்டால் வெறுப்பே தட்டி வந்தது. ஒவ்வோர் சமயம் அவன் இருக்கும் நாடகக் கம்பெனிக்கு ஸ்பெஷலாக நடிகைகள் தாவழைக்கப்படுவார்கள். இஷ்டமிருந்தால் பாலசந்திரன் அவர்களுடன் நடிப்பான். மனம் இடம் கொடுக்காவிட்டால் மறுத்தே விடுவான்.

"இந்த அழகுகளை எல்லாம் வைத்துக்கொண்டு நடித்தால் தான் நாடகம் சோபிக்குமோ?" என்று முதலாளியையே எதிர்த்துக் கேட்டு விடுவான்.

ஒரு சமயம் நடந்த சம்பவமிது. முதலாளி சோபாவில் உட்கார்ந்திருக்கிறார். புதிதாக வரவழைக்கப்பட்டிருந்த ஒரு நடி அவரிடம் பேசிக்கொண்டிருக்கிறாள். பாலசந்திரன் ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு வாசித்துக் கொண்டிருக்கிறான்.

"பாலசந்திரா!" என்று அழைத்தார் கருணாகார்.

பாலசந்திரன் திரும்பினான்.

"நாளைய தினம் சந்திரவதனாள் நாடகமே. உனக்குத் தெரியுமோ?" என்று கேட்டார்.

"தெரியுமே எனக்கு"

"கதையின் சாராம்சம்"

"பேஷாய்"

" எந்தக் கருத்தைக் கொண்டது சொல் பார்ப்போம்."

" கற்பின் மேன்மையைச் சித்தரிக்கிறது. "

" அதில் இவள் தான் கதாநாயகியாக நடிக்கப் போகிருள்." என்று சுட்டிக்காட்டினுர் கருணுகார். அங்கு நின்று கொண்டிருந்தவளை.

இதைக் கேட்டதும் பாலசந்திரனின் முகம் மாறுபட்டது. தமது இடத்தை விட்டு எழுந்து கருணுகாரின் அருகில் வந்தான்.

" ஸார்! நான் ஒன்று சொல்லுகிறேன். கோபித்துக் கொள்ளக் கூடாது. கதையோ கற்பின் மேன்மையை வர்ணிக்கும் ஓர் சித்திரம். அந்தத் தூயபாகத்தை நடிக்க, கற்பென்ருல் என்ன என்று கேட்கும் ஆத்மாக்கள் நடிப்பதை நான் விரும்பவில்லை. ஒருவன் அனுபவிக்காத நடிப்பை நடிப்பது எப்படி சாத்யமாகும்? "

அங்கு வந்தவள் முகத்தில் ஈயாடவில்லை. கடைசியில் ஒரேயடியாகச் சாதித்து அவளுடன் நடிக்க மறுத்து விட்டான் பாலு. அது தான் முதலாளியின் ஆக்ஞையை மீறி நடந்த முதல் தடவை. அதற்காக கருணுகார் கோபம் கொள்ளவில்லை.

## பாபாத்மா.

நாடகமேடைக்கு வந்தவர்களெல்லாம் ஒழுங்கு தவறி நடக்கிறார்கள் என்று அவனும் ஒரு அர்த்தமுமில்லாத கொள்கையில் இறங்கிவிடவில்லை. அவன் நேரில் அனுபவித்த ஒரு நிகழ்ச்சியிலிருந்தே அந்தத் தீவிரமான கொள்கை அவன் மனதில் வைரம் பதித்தாற்போல பதிந்துகிடக்கிறது.

புதிதாக வந்த நடியுடன் அன்று நாடகமாடினான். அவனுடன் நடித்த அப்பெண் சிறுவயதுடையவள். தன் ஹிருதயத்தைப் போலவே அவளும் தூய ஹிருதயத்தைப் படைத்திருக்கவேண்டுமென்று எண்ணினான். ஏனெனில் அவளும் பாலசந்திரனின் வயதை ஒத்திருந்தாள்.

நாடகம் முடிந்தது. அந்த நடிகை தன் வீட்டிற்குச் செல்லவேண்டும். இரவோ நடு நிசி. தனியாகப்போகப்பயப்பட்டாள்.

தன் வீடுவரையிலும் துணைக்கு வரும்படி பாலசந்திரனை அழைத்தாள். அவன் மனம் இளகிய மனம். களங்கமற்ற மனதுடன் சரி என்று ஒப்புக்கொண்டான்.

வீட்டுவாசல்வரையிலும்துணைக்குவந்துவிட்டான். 'நான் போய் வரட்டுமா' என்று கேட்டுக்கொண்டே நழுவினான்.

"கொஞ்சம் உள் வரையிலும் வாருங்கள். விளக்கேற்றிக் கொண்டு வருகிறேன்." என்றாள் அவள்.

சரி என்று உள் நுழைந்தான். விளக்கும் ஏற்றியாகி விட்டது. போவதற்கு அனுமதி கேட்டான். 'வந்த வரை யிலும் சற்று இளைப்பாறிவிட்டுப் போகும்படி' கூறிவிட்டு உள்ளே சென்ருள்.

சற்று நேரம் அங்கேயே உட்கார்ந்திருந்தான் பால சந்திரன். போனவள் ஐந்து நிமிடத்தில் கையில் வெற்றிலைத் தட்டுடனும், ஒரு கையில் பாலுடனும் அங்கு வந்தாள். அப் பொழுது அவள் வந்தது படுத்துக்கொள்ளும் ஆடையில்.

நன்றி செலுத்துவதற்காக இப்படி உபசரிக்கிருள் என்று நினைத்தான் பாலசந்திரன். பால் சாப்பிடுவதற்காக டம்ளரைக் கையிலெடுத்தான்.

அவன் கையிலிருக்கும் டம்ளரைப் பிடுங்கினுள் அவள். அவன் அருகில் உட்கார்ந்து பாத்திரத்திலுள்ள பாலை அவ னுக்கு ஊட்டவும் ஆரம்பித்துவிட்டாள்!

பார்த்தான் பாலசந்திரன். அந்த சாகஸக்காரியின் ஈன செய்கையைக் கண்ணுற்றதும் ஆத்திரம் அதிகரித்தது. கட் டிலினின்றும் எழுந்தான். அவள் விலாவைப் பார்த்து ஓங்கி உதைத்தான். சுருண்டு விழுந்தாள் அவள்.

கையிலிருக்கும் பாலை அவள் முகத்தில் கொட்டினுன். "துராத்மா! ஏன் இப்படி கெட்டழிகிருய்?" என்று வைது கொண்டே வெளியேறினுன்.

இந்த ஒரு நிகழ்ச்சியிலிருந்துதான் நாடகத்திலகங்கள் மீது அவனுக்கு கெட்ட அபிப்ராயம் விழ ஆரம்பித்தது.

## தியேட்டரில் அமளி.

ஜனங்கள் ஆவலுடன் எதிர்பார்த்திருந்த தினம் வந்தது. பாலசந்திரனையும், கல்யாணியையும் ஒரே மேடையில் சந்திக்கச்செய்ய ஏற்பாடுகள் செய்தார் கருணாகரர்.

அதற்கும் இரண்டு இடையூறுகள். முதலில் கல்யாணி இசையவேண்டும். அவள் சம்மதித்தாலும் பாலசந்திரனை சம்மதிக்கச்செய்வது வெகு கஷ்டமாகிவிடுமே.

பாலசந்திரனுக்கு எவ்வளவோ சமாதானம் கூறி அவன் மனதைத் திருப்பினார் கருணாகரர். இவ்வளவு உயர்வுக்கு தன்னைக்கொண்டுவந்த முதலாளியின் உத்திரவை மறுக்க அவனால் முடியவில்லை.

முழு நாடகத்தை நடிக்கவும் கல்யாணி இசையவில்லை. அந்தச் சரித்திரத்தில் ஒரு பகுதியை மட்டிலும் நடிக்க ஒப்புக் கொண்டாள்.

'துருவன்' நாடகம். அதில் துருவன் காட்டிற்கு தவம் செய்யப்போக தாயிடம் விடை கேட்கும் காட்சியில் மட்டிலும் நடிக்க ஒப்புக்கொண்டாள்.

நாடகதினத்தன்று கூட்டம் சொல்லிமுடியாது. எல்லா நாற்காலிகளையும் ஒதுப்புறமாக எறிந்துவிட்டு, நின்றுகொண்டு

பார்க்கக்கூட.சம்மதித்துவிட்டனர் ஜனங்கள். ஆயிரம் பேர் இருக்கக்கூடிய இடத்தில் ஐயாயிரம் பேர்கள்!

கல்யாணி தோன்றும் குறிப்பிட்ட காக்ஷியும் வந்தது. துருவனாக பாலசந்திரன் மேடைக்கு வந்துவிட்டான். அவனது தாயாக கல்யாணி நின்றுகொண்டிருக்கிறாள்.

அரச சபையில் சிறிய தாயாரால் தனக்கு ஏற்பட்ட அவமானத்தைக் கூறிவிட்டு, காட்டுக்குச்சென்று தவம் புரிய விடை கேட்கிறான் துருவன். அந்த இடத்தில் பாலசந்திரன் வெகு ரசனையாக நடித்துவிட்டான்.

தன் புதல்வனை விட்டுப்பிரிய மனம்கொள்ளாது கதறுகிறாள். அந்த இடத்தில் கல்யாணி எல்லோரையும் கதறி அழ வைத்துவிட்டாள்.

தனது ஜன்மத்திலும் இப்படிப்பட்ட ஒரு நடியுடன் சேர்ந்து நடித்ததே கிடையாது. அவளது நடிப்பை பாலசந்திரனே வியந்தான். அவள் யார் என்று பார்க்க அவள் முகத்தை எறிட்டுப் பார்த்தான். அவன் நெஞ்சை சுரீரெனப் பிடித்துக் கொண்டது. அந்தக் கிராதகி தன் முன்னால் நிற்பதைக் கண்டான். அந்த முடிவடையாத காக்ஷியில் தலையில் கையை வைத்துக் கொண்டு "ஸ்டேஜை" விட்டு வெளியே ஓடினான், பாலசந்திரன்.

விபரம் தெரியாமல் தவித்தனர் ஜனங்கள். கருணாகரர் பாலசந்திரனைக் கெஞ்சுகிறார் 'என்ன காரணமென்று.'

கருணாகாரைக் கெஞ்சிக் கேட்டுக் கொண்டான் அதை மட்டிலும் கேட்கக் கூடாதென்று. தன் மனம் சரியான நிலை யிலில்லை என்றும், அன்றைய நாடகத்தில் நடிக்க முடியா தென்றும் மறுத்து விட்டான்.

அவரால் ஜனங்களிடம் இதைக்கூறி எப்படி தலை தப்பு வது. அதையும் அவனே செய்யும்படி மன்றாடினார் கருணா கார்.

குழப்பத்தி னிடையில் மேடையில் ஏறினான் பாலசந் திரன். கை கூப்பி நமஸ்கரித்தான். தன் மனம் சரியான நிலையில் இல்லையென்றும்; எல்லோரும் தன்னை மன்னித்து ஆசிர்வதிக்க வேண்டு மென்றும் கேட்டுக் கொண்டான். ஜனங்களும் கலகம் செய்யாமல் கலைந்தனர்.

கல்யாணி யோசித்துப் பார்த்தாள். ஒருக்கால் அவன் தான் தன் புதல்வனாக இருக்குமோ என்று எண்ணினாள். கேட்கவும் பயம். யார் என்ன நினைத்துக் கொள்வார்களோ, இப்படி யெல்லாம் எண்ணி கருணாகாரிடம் கேட்ட பொழுது அவன் தன் புதல்வன் என்று கூறி விட்டார். கல்யாணிக்கு இருந்த சந்தேகம் தீர்ந்தது.

## மாப்பிள்ளையா?

இந்தச் சம்பவத்திற்குப் பின் ஒரு வாரமாகி விட்டது. தன் முதலாளியைப் பார்த்து வர அவர் வீட்டிற்குச் சென் றான். அவனுக்கு அந்த வீட்டில் எங்கு செல்ல வேண்டு மானாலும் உரிமையுண்டு.

நேரே உள்ளே சென்ருன். தனது எஜமானைத் தேடிக் கொண்டு கூடத்திற்கு வந்ததும் திடுக்கிட்டான். தன் எஜமானனின் புதல்வி சுவற்றில் மாட்டியிருந்த ஒரு படத்தைப் பார்த்து கண்ணீர் விட்டுக்கொண்டிருந்தாள்.

பாவம்! அவளுக்கு என்ன குறையோ என்று நினைத்தான் பாலசந்திரன். இருந்தாலும் ஒரு கலக்கம்.

கருணுகரர் இருக்குமிடத்திற்குச் சென்ருன். பாலசந்திரன் கலங்கிய கண்களுடன் வருவதைக் கண்டு திகைத்தார்.

"பாலசந்திரா! என் ஒருமாதிரியாக இருக்கிருய்?" என்ருர் அவர் அதற்கு பதில் ஒன்றும் கூறவில்லை. தன்னுடன் வரும்படி அவரைக் கேட்டுக்கொண்டான். கூடத்து ஹாலுக்கு அழைத்துச்சென்று அங்கு மாட்டப்பட்டிருந்த ஒரு படத்தை காட்டினன்.

"இவன் உங்களுக்கு சொந்தமா?" என்று கேட்டான்.

"இவர்தான் என் மாப்பிள்ளை பெரிய வித்வான்" என்று கூறினர் அப்பொழுது அவர் கண்களில் நீர் ததும்பியது.

"இருபது வருடங்களுக்கு முன்னல் என் ஒரே அருமை பெண்ணை, பேரும் புகழுடனும் இருக்கிருனே யென்று சுந்தரேசன் என்பவனுக்கு மனம் செய்து கொடுத்தேன். அவனை ஒதுக்கி விட்டு, எந்தத் தாசியின் வலையிலோ சிக்கி அலைகிருன்" என்று சொல்லி வருத்தப்பட்டார் கருணுகரர்.

அப்படிச்சொல்லும்பொழுது பாலசந்திரனின் ஹிருதயத்தில் கூர் கொண்டு தாக்கியது. என்ன இருந்தாலும், தாயைத் தாசியென்றால் யாருக்கும் கஷ்டம்தானே.

## உச்சி குளிர்ந்தது!

ஒரு நாள் கருணாகார் தன் சொந்த வேலை நிமித்தம் அயலூருக்குச் சென்றார். போகும் பொழுது பாலசந்திரனையும் அழைத்துச்சென்றார்.

போனகாரியம் முடிந்தது. அவ்வூரில் அன்று பிரபல நாடகம் என்று கேள்விப்பட்டு பாலசந்திரனையும் அழைத்துக் கொண்டு தியேட்டருக்குச் சென்றார்.

அப்பொழுது அங்கு பிரதம கதாநாயகி வேஷக்காரியைக்கண்டதும் பாலசந்திரன் திடுக்கிட்டான். அவன் மனம் அங்கிருக்க இடம் கொடுக்கவில்லை. வெளியில் எழுந்து சென்றால் கருணாகார் என்ன நினைத்துக் கொள்வாரோ என்ற பயம் வேறு.

பல்லைக் கடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். துருவச் சரித்திரம்தான் அன்றும். துருவன் தன் தாயைப் பிரியும் கட்டம் வந்துவிட்டது. புதல்வன் பிரிவைத் தாங்கமாட்டாமல் தாய் கதறியழுவதைக்கண்டு எங்கும் அழுகை.

நிமிஷம் ஏற ஏற பாலசந்திரன் கடின ஹிருதயம் இளகியது. அந்த இடத்தில் அவள் புலம்புவது உண்மையாக தன்னை

நினைத்துத்தான் என்றெண்ணினன். பல்லைக்கடித்துக்கொண்டு எவ்வளவோ அடக்கிப்பார்த்தான். அவனையும் மீறிட்டுக் கொண்டு கிளம்பியது பெற்ற தாயின் பாசம்.

நடுக்காக்ஷியில் ஆவேசம் வந்தவன்போல் எழுந்து விட்டான். “அம்மா” “அம்மா” என்று கதறினன். கூட்டத்தில் குழப்பம்.

தன் புதல்வனின் குரல் போன்று இருப்பதைக் கண்டதும் கல்யாணி பாதவித்தாள் ‘பாலசந்திரா! பாலசந்திரா?’ என்று கதறிக்கொண்டே மேடையைவிட்டு சோபா, நாற்காலி எல்லாவற்றையும் தாண்டிவிழுந்து தூணில் மோதிக்கொண்டு மண்டை உடைந்து ரத்தம்கொட்டுவதையும் கவனியாமல் பால சந்திரனை நோக்கி ஓடிவந்தாள். பெற்றபாசம்! பாலசந்திரனைக் கட்டிக் கொண்டு ஆனந்த சாகரத்தில் மூழ்கினள் கல்யாணி.

ஜனங்களுக்கும் உண்மை விளங்கியது.

அந்த சம்பவத்தினல் மண்டையில் அடிபட்ட வேகத்தில் கல்யாணி படுத்த படுக்கையாகி விட்டாள். எதிர்பாராத விதமாக ஆபத்தான இடத்தில் காயம்.

கட்டிலில் படுத்திருக்கிருள் கல்யாணி. பாலசந்திரன் அருகில் உட்கார்ந்திருக்கிருன் சுற்றிலும் சுந்தரேசன், கருணகார், ஜானகி முதலியோர் நின்று கொண்டிருக்கின்றனர்.

கல்யாணியிடம் சுந்தரேசனுக்கு, கருணகாருக்கும் உள்ள சம்மந்தத்தைக் கூறினன் பாலசந்திரன். ஜானகிக்கு புத்துயிர் வாழ்வு அளிக்கும்படி கெஞ்சினன்,

இருபது வருஷமாகப் பிரிந்திருந்த காதலர்கள் இருவர் ஒன்று சேர்ந்தனர்.

பாபாத்மா தனக்குப் பிராயச்சித்தம் செய்துகொண்டது.

கல்யாணி ஒரே நித்திரையில் ஆழ்ந்தாள்.

அவள் சாகும் பொழுது பாலசந்திரனுக்கு உபதேசித்தாள்.

"காதல்
என்பது ஒன்றில்லை.
அது நிலைநில்லாத ஆசையே.
இன்று ஒருபொருளில் ஆசை விழும்.
அதைவிட அழகான ஒரு பண்டத்தைக்கண்டால்
அந்த ஆசை அதன் மீது தவ்வி விடும், பெண்கள் சம்பந்தப்பட்ட வரை இது ஒரு போதை. மனித வாழ்வைப் பாழ் படுத்துவது அந்த போதை—அர்த்தமற்ற காதல். அது கவிகளின் கற்பனைதவிர வேறில்லை. அதைநம்பி மயங்காதே"

End.



Printed at the NAGARATHAR PRESS, Kondanoor.

Printed at the NAGARATHAR PRESS, Kondanoor.